

# ஸப்தகிரி

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்

(காவிரிச் சிறப்பிதழ்)

அக்டோபர்

1981

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலுக்குள் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப்போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே,

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி

8-00 முதல் 12-00 (நடு இரவு) **ஸர்வதரிசனம்**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.

8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**

மதியம் : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் நடுஇரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்.**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன:

8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.

மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன:

இரவு 8-00 முதல் 12-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)

7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன

8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)

9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன

10-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன,

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுததி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன:

8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)



**தரள தநு தரங்கைர் மந்த மாந்தோல்யமாந—**
**ஸ்வதட விடபிராஜீ மஞ்சரீ ஸுப்தப்ருங்கா!**
**க்ஷிபது கநகநாம்நீ நிம்நகா நாரிகேள—**
**க்ரமுகஜ மகரந்தைர் மாம்ஸலாபா மதம்ஹ: ॥**

*(ஸ்ரீரங்க ராஜஸ்தவம் 1-24)*

கருத்துரை :

*அசைகின்ற மெல்லிய அலைகளால் மெதுவாக அலைக்கப்படுகின்ற தன் கரையிலுள்ள மலர்ச் சோலைகளின் பூங்கொத்துக்களில் தூங்குகின்ற வண்டுகளை உடையதும், தென்னை மரம் பாக்கு மரம் இவைகளிலிருந்து உண்டான மகரந்தத்தையுடைய நீரை உடையதுமான 'பொன்னி' என்னும் பெயரை உடைய காவேரி நதியானது என்னுடைய பாபத்தை அழிக்கட்டும்!*

அனுப்பியவர்: பாதூர் ரங்கராஜன் - திருப்பதி.




தனிப்பிரதி ரூ. 1

வருடச் சந்தா ரூ. 12

# அக்டோபர் 1981

மலர் 12

இதழ் 5





**முழு விவரங்களுக்கு:**

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.


## உள்ளுறை

# உங்களுடன் .....

மனிதன் தன்னைக் கண்டு அஞ்சாவிட்டாலும், இயற்கையைப்பற்றிய அச்ச உணர்வு அவன் மனதில் அவ்வப் போது எழத்தான் செய்கிறது. அவ் இயற்கையைத்தான் சமய உணர்வுடையோர் இறைவன் என்று அழைக்கின் றனர். அவ் இயற்கை அன்னையின் தலைமகளாக விளங்குபவள் நீராகும். அந்நீரினை தொடர்ந்து பல நாட்கள் காணவிட்டாலும் அல்லது அந்நீரினை அதிகமாகக் கண்டாலும் அஞ்சுகிறான் மனிதன். ஆம் நீர் அதிகமானால் வெள்ளம்; குறைந்தால் வறட்சி. மனிதனை தன்னை உணரச் செய்யும் நிலையில் வைத்து, அவனை ஆட்டுவிக்கும் நீர் வளம் எனும் அவ் இயற்கையின் சக்தியினிடத்தே பெரும் மதிப்பு வைத்தே, அதனை இறையம்சமாகக் கொண்டு வழிபட ஆரம்பித்தான் மனிதன். அதுவே, அவனுடைய சமய உணர்வுக்கு அடிகோலி, அவ்வுணர்வினை அவனுள்ளே தழைத் தோங்கச் செய்தது. இவ்வகையில் பாரத மண்ணில் குறுக்கும் நெடுக்குமாக ஓடி கடலில் சங்கமமாகும் கோதாவரி, கிருஷ்ணா, கங்கை, யமுனை, காவிரி போன்ற பல ஜீவ நதிகள் இந்து சமயத்துள்ளும், சமய வாழ்க்கை யிலும் ஒன்றிணைந்து, அச்சமயத்திற்கு ஏற்றம் பல விளைவித்தன. இந்நதிகளில் முக்கியமான 12 நதிகளின் பெரு மையை மனதிற்கொண்டு, அந்நதிகளுக்கு 'புஷ்கராலு' எனும் புனல்விழா எடுத்து மகிழ்ந்தனர் ஆன்றோர். அதா வது பிரகஸ்பதி எனும் தேவகுரு ஒவ்வொரு ராசியிலும் ஒரு வருடம் இருந்து மறுபடியும் புறப்பட்ட ராசிக்கு வருவதற்கு 12 ஆண்டுகள் ஆகின்றன. இதனையே புஷ்கரம் என்றழைக்கின்றனர். ஒவ்வொரு ராசியிலும் குரு சஞ்சரிக்கும் போது, 12 ராசிகளுக்கு 12 ஜீவ நதிகளை ஒதுக்கி, இதுபோது அந்நதிகளில் மூழ்கி எழுவது, நதிக்கரை களில் தக்க வைதீக சடங்குகளை மேற்கொள்வது, நதிக்கரைகளில் உள்ள புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை மேற் கொள்வன போன்றவை நமக்கும், நாம் வாழும் சமுதாயத்திற்கும் இம்மை மறுமை இன்பங்களை வழங்கும் என்று நமது சமய இலக்கியங்கள் பகர்கின்றன. இவ்வகையில் 1979லும், '80லும் முறையே கோதாவரி, கிருஷ்ணா நதி களின் 'புஷ்கராலு' வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டு, அவற்றில் தி. தி. தேவஸ்தானம் குறிப்பிடும்படி யான பங்கும் வகித்தது. இவ்வாண்டு, நீரைக் கொடுக்கும் தெய்வமான சூரியனும், பிரகஸ்பதியும் ஒன்று சேர்ந்து, காவிரி நதிக்கான துலா ராசியில் இம்மாதம் 27-ம் தேதி முதற்கொண்டு சஞ்சரிக்க உள்ளதால், காவிரியின் புனல் விழா அதாவது 'காவிரி புஷ்கரம்', 27-10-81 முதல் 7-11-81 வரை பெரு மகிழ்ச்சியுடன் காவிரிக் கரைகளில் கொண்டாடப்படும்.

இப்பெருமை மிகு காவிரித் தாயின் சிறப்பு, அந்நதிக்கரைகளில் தமிழ் நாட்டில் விளங்கும் புண்ணியத் தலங்கள் பற்றிய கதை கட்டுரைகளைக் கொண்டு 'காவிரிச் சிறப்பிதழாக' வெளி வந்துள்ள இம்மாத இதழ் வாசகர் களுக்குப் பெரும் பயனாக அமையும் என்றே நம்புகிறோம். காவிரிபற்றிய கதை, கட்டுரைகளை 'ஸப்தகிரி'யின் வேண்டுகோளுக்கிணங்கி பத்திரிகைக்கு அனுப்பி வைத்த எழுத்தாளர் பெரு மக்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்து, வாசகர்களுக்கும், பிரதிநிதிகளுக்கும், எழுத்தாளர்கட்கும் 'வேதம் புகழ்' காவிரியின் அன்பும் அருளும் என்றும் கிடைக்க அவ்வேங்கடவன் திருவருள் புரிய வேண்டுகிறோம்!

ஆசிரியர்.

## ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் பிரம்மோற்சவம், திருமலை

உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 29—9—81 | செவ்வாய் | — | சேனாபதி உற்சவம், அங்குரார்ப்பணம், |
| 30—9—81 | புதன் | வஜ்ரகவசத்துடன் திருச்சி உற்சவம் துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 1—10—81 | வியாழன் | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 2—10—81 | வெள்ளி | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 3—10—81 | சனி | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 4—10—81 | ஞாயிறு | பல்லக்கில் மோகினி அவதாரம் | மகரகண்டிகை ஸ்ரீலக்ஷ்மி ஹாரம் ஆகிய ஆபரணங்களுடன் கருட வாஹனம் |
| 5—10—81 | திங்கள் | ஹனுமந்த வாஹனம் [மாலை-வசந்தோற்சவம்] | கஜ வாஹனம் |
| 6—10—81 | செவ்வாய் | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப் பிரபை வாஹனம் |
| 7—10—81 | புதன் | ரதோற்சவம் | குதிரை வாஹனம் |
| 8—10—81 | வியாழன் | பல்லக்கு உற்சவம், அவப்பிரதோற்சவம் (சக்கர தீர்த்தம்) | திருச்சி, துவஜாவரோஹணம் |

## மதிப்புரை

# ஞானபூமி

ஞானபூமி : ஆர். என். ஜெய நாராயணக்கண்ணன். பக்கங்கள் 348+22. வெளியிடுவோர்: ஓங்காரம், 7/18, நடுத்தெரு, சோலை நகர், பாண்டிச்சேரி-605003. விலை ரூ. 25-00.

பூவுலகு அனைத்திலும் நமது பாரதமே 'மாமுனிவோர் பலர் வாழ்ந்த பொன்னாடு', 'பூரண ஞானம் பொலிந்த நன்னாடு' என்றெல்லாம் போற்றப்பட்டு வரும் புண்ணிய பூமியாகும். இன்றும்கூட நம்மிடையே திருவருட்செல்வர்கள் பலர் நடமாடும் தெய்வங்களாகவும் இறையறிவு நிறைந்து தளும்பாத குடங்களாகவும் விளங்கி, அருட் செயல்கள் புரிந்து மக்களுக்கு வழி காட்டிகளாகவும் அருள் துணையாகவும் இருந்து வருவதைக் காண்கிறோம். அத்தகையோர் இருப்பதனால்தானோ என்னவோ, பலப்பல அயல்நாடுகளிலிருந்து அக அமைதியையும் ஆன்ம அறிவையும் நாடிப் பாரதத்திற்கு வருவோரின் எண்ணிக்கை மிகுந்து கொண்டே வருகிறது.

ஞானத்திலும் பரமோனத்திலும் தனிச் சிறப்புடன் கோலோச்சி வரும் நமது நாட்டிலே கூட, ரிஷிகளும் சித்தர்களும் ஞானிகளும் முனிவர்களும் குறிப்பிட்ட சில பகுதிகளைத் தேர்ந்தெடுத்து, அருந்தவமியற்றி, அருள் நெறி பரப்பி, சித்தி பெற்று, மக்களைத் தெய்வீக வாழ்க்கை முறைக்குக் காந்தமென ஈர்க்கும் புனித தலங்களாக அவ்விடங்களைச் செய்துள்ளனர். அத்தகைய பகுதிகளுள் ஒன்றே பழம் பெருமை வாய்ந்த, அகத்திய முனி அமைத்த, வேதபுரி என்றழைக்கப் பெற்ற, தமிழ்நாட்டிலுள்ள புதுவை நகர்ப் பகுதியாகும்.

'ஞானபூமி'யான புதுவை நிலத்தில் இறைமணம் பரப்பி வாழ்ந்த முப்பத்திரண்டு ஆன்ம வீரர்களைப் பற்றிய அரிய பல செய்திகளைச் சரித்திரச் சான்றுகள், வழி வழிக் கதைகள், கல்வெட்டுகள் முதலியவற்றின் உதவியுடன் ஆசிரியர் இந்நூலில் வழங்கியுள்ளார். ஆந்திரம், மகாராஷ்டிரம், கர்னாடகம், வங்கம், இலங்கை போன்ற இடங்களிலிருந்தும் வந்து இங்கு சித்தியடைந்த ஆன்ம ஞானிகளைப் பற்றிய வரலாறுகளைக் கொண்டுள்ளது இந் நூல். அன்றியும், இஸ்லாம், கிறித்துவம் போன்ற சமயங்களைச் சார்ந்த மகான்களின் வரலாறுகளும் இதில் இருப்பது இந்நூலின் பிறிதொரு போற்றத்தகு அம்சமாகும்.

ஏறக்குறைய எட்டு நூறு ஆண்டுகளுக்கு முன் அற்புதங்கள் நிகழ்த்தி வாழ்ந்த கழுவெளிச் சித்தர் முதல் நேற்று வரை நம்மிடை இருந்து ஆன்ம வாழ்விற்கு வழிவகுத்துதவிய மகான் அரவிந்தர், அவரைக் குருவாகக் கொண்ட 'அன்னை' ஈறாகப் பல ஞானிகள் பெற்ற விதி அநுபவம், உயிர் அநுபவம், அருள் அநுபவம், மரண அநுபவம், ஆத்மாநுபவம், ஞான அநுபவம், இறைக் காட்சி அநுபவம், இறைவனோடு ஐக்கியமாகும் சச்சிதாநந்த அநுபவம் போன்ற ஆன்ம அநுபவங்களைப் படிக்கும்போது, மனித குலம் மேன்மையுறுவதற்கான ஆன்ம நேய ஒருமைப்பாட்டையும் ஆநந்த அமைதியையும் ஒவ்வொருவருமே தத்தம் உண்மையான முயற்சியினாலும் பயிற்சியினாலும் பெற முடியும் என்பது நன்கு விளங்குகிறது.

தம்மை வணங்கித் தெய்வப் பெண்ணாக மாறிய தேவதாசி வள்ளிக்காக 'அல்லும் பகலும் உனையே தொழுதேன், கல்லும் பிளந்து கழுவெளியாமே' என்று பாடி, இரும்பை மாகாளீஸ்வர லிங்கமே மூன்று துண்டுகளாக வெடிக்கும்படி செய்த கழுவெளிச் சித்தர், பெருமுக்கல் மலையில் வெம்மை மிகுந்த சதுரக் கள்ளிப்பாலை உணவாகக் கொண்டு வாழ்ந்த சிவஞான பால சித்தர், காஞ்சிபுரத்தை ஆண்டு வந்த நவாபின் மனைவியின் குலை நோயைக் குணப்படுத்தி, மூடப்பட்டிருந்த ஏகாம்பரநாத ஆலயத்தைத் திறக்க வைத்த சிவஞான பாலைய சுவாமிகள், பிறவியிலேயே அருளோடு பிறந்து, ஓங்கார ஒலி கேட்டு, அதனுள்ளேயே வாழ்ந்த தொள்ளைக் காது சுவாமிகள், தாம் செய்யும் ஒவ்வொரு செயலையும் இறைவனுக்கு அர்ப்பணிப்பதிலேயே மகிழ்ச்சி கொண்டிருந்த மௌலானா சாஹிப் மெய்ஞானி, உலகம் உய்ய இறைவன் அருளிய திருவாசகத்தைப் போற்றிப் பாதுகாத்துப் புதுவைக் கொண்டு வந்த நாகலிங்க சுவாமிகள், மகாகவி பாரதியார் சிறப்பித்துப் பாராட்டிப் பாடியுள்ள சித்தானந்த சுவாமிகள், குள்ளச் சாமியார், சின்னபாபு சமுத்திரத்தில் ஆன்ம சாதனை புரிந்து இறைவனோடு கலந்த மகான் படே சாயபு, மனிதன் தேவ மனிதனாக ஆவதற்கு வழி செய்யும் பூரண யோகத்தின் தன்மையை வாழ்ந்து விளக்கிய மகான் அரவிந்தர், அவர் தம் முதல் சிஷ்யையான 'அன்னை' முதலியவர்களின் வரலாறுகள் நம்மைப் புல்லரிக்க வைக்கின்றன.

மிகுந்த உழைப்புடன், விவரங்களைத் திரட்டித் தொகுத்து, மிகச் சீரிய முறையில் அழகுமிளிர நூலை வெளிக் கொணர்ந்துள்ள ஆசிரியரின் முயற்சிக்குத் தமிழுலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. இதைப் போன்றே, வேறு பல பகுதிகளிலும் மக்களுக்கு ஆன்ம வழிகாட்டிகளாக வாழ்ந்து சமயத்திற்குத் தொண்டு புரிந்துள்ள இறை-மாந்தர்களின் சரிதங்களையும் வெளியிடுவது நிரம்பவும் பயனுள்ளதாயிருக்கும்.

நூல் விற்பனை மூலம் கிடைக்கும் பொருள் யாவும் தியான மண்டபம் நிர்மாணிப்பதற்குப் பயன்பட இருப்பதால், அன்பர்கள் இவ்வுயர்ந்த முயற்சியினைப் பெருமளவில் ஆதரிக்க வேண்டியது அவசியமாகும்; அது அவர்கள் சமயத்திற்குச் செய்ய வேண்டிய கடமையுங் கூட.

அ. நடராஜன்

*



உலகில் வாழும் உயிர்கள் அனைத்திற்கும் மிகவும் அவசியமானது நீராகும். இதனைக் குறள் ''நீரின்றி அமையாது உலகம்...'' என்கிறது. இத்தகைய நீரினைத் தரும் கிணறு,குளம், ஆறு, கடல் அனைத்தையும் தெய்வமாக வழிபடும் வழக்கம் நம் பாரத மக்களிடம் அந்நாள் முதல் இந்நாள் வரை இருந்து வருவது கண் கூடு.

தெய்வ வழிபாட்டில் மூர்த்தி, தலம், தீர்த்தம் என மூன்றாவதாக தீர்த்தம் குறிப்பிடப்படுகிறது. இத்தகைய நீரினை சிவமாக வழிபட வேண்டுமென்பதை "சென்றாடு தீர்த்தங்கள் ஆனார் தாமே..' எனச் சிவபிரானை அப்பர் குறிப்பிடுகின்றார்.

உமாதேவியார் திருவானைக்கா என்னும் தலத்தில் காவிரி நீரையே சிவலிங்கமாகப் பிடித்து வைத்துப் பூசித்தார். அதுவே இன்று அப்பு லிங்கமென அங்கு அழைக்கப்படுகிறது.

நம் நாட்டில் ஓடும் கங்கை, யமுனை, சரஸ்வதி, நர்மதை, கோதாவிரி, காவிரி முதலிய நதிகள் நீராடியோரது உடற்பிணியையும் பிறவிப் பிணியையும் போக்கும் உடன் பிறவா மருந்தாக விளங்குகின்றன. இவ்வளவு சிறப்புமிகு இந்திய நதிகளில் பரத கண்டத்தின் வடக்கில் ஓடும் கங்கையும், தெற்கில் ஓடும் காவிரியும் மிக முதன்மையாக விளங்குகின்றன.

சாதாரணமாகக் குறிப்பிடுகையில் வட இந்திய நதிகள் அனைத்தையும் பொதுவாக கங்கை எனவும், தென் இந்திய நதிகளை காவிரி எனவும் அழைப்பர்.

இவற்றுள் காவிரியின் சிறப்பினை எடுத்தியம்பாத வடமொழி தென்மொழி நூல்கள் எதுவும் இல்லை. இந்நதி அகத்திய முனிவரது கமண்டலத்தில் இருந்ததை விநாயகப்பெருமான் காக்கை வடிவாய்ச் சென்று கவிழ்க்க அது நதியாக சைய மலையில் இருந்து பெருக்கெடுத்துக் கர்நாடகம், கொங்கு, சோழம் இந்நாட்டு வழி பாய்ந்து வங்கக் கடலில் கலக்கிறது. இதற்கு அமராவதி, நொய்யல், பவானி முதலிய உப நதிகளும், கொள்ளிடம், அரிசில், திருமலைராசன், குடமுருட்டி, முடிகொண்டான், வெட்டாறு, வெண்ணாறு முதலிய கிளை நதிகளும் உண்டு. இவற்றால் தென்னாட்டின் இடைப்பகுதி, இன்னும் சிறப்பாக சோழ நாடு மிக்க வளம் பெறுகிறது.

இக்காவிரியின் சிறப்பைத் தனியே எடுத்துக் கூறும் 'காவேரிப் புராணம்' என்ற நூலும் மற்றும் இதன் கரையில் அமைந்துள்ள திருவரங்கம், திருவானைக்கா, திருவையாறு, திருக்குடந்தை, திருவிடை மருதூர், மாயூரம், காவிரிப் பூம்பட்டினம் முதலிய திருத்தலங்களின் புராணங்களும் எடுத்துரைக்கின்றன.

திருவரங்கத்தின் இருப்பிடச் சிறப்பை தொண்டரடிப் பொடியாழ்வார் குறிப்பிடுகையில் "கங்கையில் புனிதமாய காவிரி நடுவு பாட்டு பொங்கு நீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கம்'' என கங்கையினும் சிறந்தது காவிரி எனக் குறிப்பிடுகிறார். இதேபோல் சோழ நாட்டில் விளங்கும் பல தலங்களும் காவிரியின் சிறப்போடு சேர்த்தே கூறப்படும்.

இவ்வாறு விளங்கும் காவிரிக்கரைச் சிவத் தலங்களுள் திருவையாறு மிகச் சிறப்புடையதாகும். இத்தலம் சோழ நாட்டில் காவிரியின் வட கரையில் உள்ளது. இன்னும் இது காவிரி, கொள்ளிடம், குடமுருட்டி, வெட்டாறு, வெண்ணாறு ஆகிய பஞ்ச நதிகள் பாயும் இடையில் இருப்பதால் இதை தக்ஷிண பாஞ்சாலம் எனச் சிறப்போடு அழைப்பர். பஞ்சநதம், ஐயாறு என்றும் கூறுவர்.

தென்னாட்டில் சிறந்து விளங்கும் இத்திருவையாற்றினைக் கூறிய அளவில் மக்கள் உள்ளத்தில் 'சப்த ஸ்தானம்' என்னும் பெருவிழா உள்ளத்தெழும். இது தென்னாட்டில் ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் நடக்கும் மிகப் பெரும் திருவிழாவாகும். இவ்விழாவில் இத்தலத்து இறைவனாகிய பஞ்சநதீஸ்வரர் (ஐயாறப்பர்) தர்ம ஸம்வர்த்தனி (அறம் வளர்த்த நாயகி) உடன் கண்ணாடிப் பல்லக்கில் அமர்ந்து நந்தி யெம்மான் பெருமான் உடன் வர இக்காவிரியின் இருகரையிலும் உள்ள திருப்பழனம், திருச்சோற்றுத் துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் ஆகிய ஊர்களுக்குச் சென்று வருவது கண்கொள்ளாக் காட்சியாகும்.

இன்னும் இப்பெருவிழாவின் ஐந்தாம் நாள் நடக்கும் 'ஆத்ம பூஜை'

வித்துவான். மா. சிவகுருநாதபிள்ளை,
சுந்தரப்பெருமாள் கோயில்

மிக மிகச் சிறப்புடையது. மேலும் பிரதி மாதப்பிறப்பு, அமாவாசை மற்றும் பல புண்ணிய காலங்களில் இடப வாகனத்தில் பஞ்சநதீஸ்வரர் எழுந்தருளி காவிரியின் கரையில் உள்ள புஷ்ய மண்டபத்தில் தீர்த்தம் அருளுவது காணத் தக்கது. இத்தகைய புஷ்ய மண்டபங்கள் இக்காவிரிக்கு இத்திருவையாறு, திருவிடை மருதூர், திருவலஞ்சுழி இம்மூன்று இடங்களில் அமைந்துள்ளன.

இத்தகைய திருவையாறு, தேவாரம் திருவாசகம் மற்றும் பல தெய்வத் தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. திருக்கயிலையை நேரில் காண இமயம் வரை சென்ற அப்பருக்கு அக்காட்சி இந்த ஐயாற்றில் தான் கிடைத்தது.இவ்வைபவம் இன்றும் ஆடி அமாவாசையில் இங்கு நடைபெறுகிறது.

(43-ம் பக்கம் பார்க்க)

சிவமிச்சன் மனுஷ்யாணும்

தஸ்மாத் தேவ: சிவ ஸ்ருத: ||

என்பது மகாபாரத வாக்யமாகும்.

ஸ்ரீ பரமேச்வரன் தன்னை வழிபடு கிறவர்களுக்கு மங்களத்தை அளிக்க விருப்பம் கொண்டவராதலால் அவர் 'சிவ' என்னும் சொல்லால் அழைக்கப் படுகிறார். அந்த சிவ என்னும் சொல் பரமேச்வரனின் பெருமையைக்கூறும் ஸ்ரீருத்ரத்தின் நடுநாயகமாக அமைந் துள்ளது. ரிக், யஜுஸ், ஸாமம் ஆகிய மூன்று வேதங்களிடையே நடு நாயக மணியாக விளங்குவது யஜுர் வேதம். அந்த யஜுர் வேதத்தில் தைத்தரீய ஸம்ஹிதை ஏழு காண்டங் கள் கொண்டது. ஏழு காண்டங்களி லும் நடு நாயகமணி போல் பிரகாசிப் பது நான்காவது காண்டம். அந்தக் காண்டத்தின் நடுவில் மகாமந்திரங் கள் அடங்கிய ஸ்ரீருத்ரம் ஐந்தாவது ப்ரசனமாக அமைந்துள்ளது. அதன் நடுவில் ''நம: ஸோமாயச'' என்ற அனுவாகம் இரண்டு பஞ்சாதிகளுடன் கூடியது. இந்த இரண்டின் நடுவில் ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரமாகிய 'நம: சிவாய' என்பது அமைந்துள் ளது. அந்த பஞ்சாக்ஷரத்தின் நடு வில் நடுநாயகமணியாகவும், ஜீவ ரத்ன மணியாகவும் அமைந்துள்ளது 'சிவ' என்ற பதமாகும்.

பஞ்சாக்ஷரத்தின் மகிமையை ஆதி சங்கரர் விளக்குகிறார்.

''இந்த மகாமந்த்ரம் மகாபாதகங் களையும் விலக்கி பரம சுத்தியை அளிக்கக் கூடியது. இந்தமந்திரத்தை ஜபித்துக் கொண்டு பசுபதியான பர மேச்வரனை உள்ளத்தில் தியானித்துக் கொண்டு, மானத்தைக் காக்கத் துணியை உடுத்திக்கிடைத்தஉணவை உட்கொண்டு உலகிலுள்ள புனித க்ஷேத்திரங்களுக்குச் சென்று வரு கின்றவர்கள் பாக்யசாலிகள்'' என் கின்றார்.

பஞ்சாக்ஷரம் பாவனமுச்சரந்த:
பதிம் பசூனும் ஹ்ருதி பாவயந்த: |
பிக்ஷாசன: திக்ஷு பரிப்ரமந்த:
கௌபீனவந்த: கலு பாக்யவந்த: ||

ஸ்ரீதர அய்யாவாள், ஸ்ரீ ஹரதத்த சிவா சாரியார், ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதர் போன்ற சிவபக்தர்கள் பஞ்சாக்ஷர மகாமந்திரத்தை ஜபித்து அந்த தெய் வத்தை உள்ளத்தில் கண்டு ஸ்ரீபரமேச் வரனுடைய மகிமையை துதிகளால் விளக்கியுள்ளார்கள்.

ஒரு சமயம் ஸ்ரீ ஹரதத்த சிவா சாரியாருக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்ட தாம். அதாவது சிவ என்ற இரண்டு எழுத்துக்களால் எல்லாப்பாவங்க ளும் விலகுவதானால் முனிவர்கள் பிராயச்சித்த நூல்கள் எழுதுவா னேன் என்பதுதான் அந்த சந்தேகம்.

அதற்கு விடை பரமேச்வரனே கூறினாராம்.

'சிவ நாமாவை ஜபித்தால் அதனால் போகக் கூடிய பாவங்களை உலகில் ஒருவராலும் செய்யமுடியாது. அத னால்தான் சிவ நாமாவை பிராயச் சித்தமாக தத்துவமறிந்த முனிவர் கள் குறிப்பிடவில்லை' என்று.

சிவ நாம விஞஶ்யாணும்
பாதகாணுமபாவத: |
ப்ராயஸ்சித்ததயா நோக்தம்
முனிபி: தத்வதர்சி பி: ||

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த சிவ என்னும் சொல்லை நடு நாயக மாகக் கொண்ட பஞ்சாக்ஷர மகா மந்திரத்தால் பிரகாசிக்கின்ற ஸ்ரீருத் ரத்தை ஜபிப்பவன் வசிக்கும் கிராமத் திலோ, நகரத்திலோ, வைசூரி, பஞ் சம், வியாதி, மனோவியாதி, துர்பி க்ஷம், திருட்டு போன்ற இடையூறு கள் உண்டாகாது என்று முனிவர் கள் கூறுகின்றனர்.

ருத்ராத்யாயி வஸேத் யத்ர
க்ராமேவா நகரேபி வா |
வ்யாதி துர்பிக்ஷ சோராதி
பாதா தத்ர ந ஜாயதே ||

கைவல்ய உபநிஷதத்தில் இந்த ருத்ர மந்திரத்தை ஜபிப்பவன் நெருப்பில் தங்கத்தைப் புடம் போட்டு எடுத் தது போல் பரிசுத்தனுகி விடுகிறுன். பஞ்ச மகா பாதங்களிலுமிருந்து விலகி சுத்தனுகி விடுகிறுன் என்று கூறப்பட்டுள்ளது.

துறவிகள் கூட எப்பொழுதும், தினமும் ஒரு முறையாவது ஜபிக்க வேண்டும். இதனுல் ஞானம் ஏற்பட்டு மறுபிறவியும் மரணமும் விலகும் என்று சாதாதப ஸ்ம்ருதி கூறுகிறது. கள் குடித்தவன், குருதல்பகமனம் செய்தவன், தங்கம் திருடினவன், பிரும்மஹத்தி செய்தவன், இவர்கள், விபூதியை தரித்துக்கொண்டு விபூதி யின் மேலமர்ந்து ருத்ரத்தை ஜபித் தால் எல்லா பாவங்களிலிருந்தும் விடுபடுகிறுன்.

மத்யம் பீத்வா,குருதாராம்ஸ்ச கத்வா
ஸ்தேயம் க்ருத்வா ப்ரும்ம
ஹத்யாம்ஸ்ச க்ருத்வா।
பஸ்மச்சன்னே மஸ்மசய்யா சயானே
ருத்ராத்யாயி முச்யதே ஸர்வபாபை: ||

அத்ரி ஸ்மிருதியில் தர்மம் அறிந்த வன் ஸ்ரீ ருத்ரத்தை 11 முறை ஜபித் தால் மகா பாதகங்களிலிருந்தும் விடு படுவான் என்று கூறப்பட்டுள்ளது.

## ★ தாயுமானவர் ★

திரு. ஆர். வெங்கடராம சாஸ்திரிகள்,
சிட்லபாக்கம்.

வேதத்தை ஒரு முறை சொல்லி முடித்தால் அவன் அன்று செய்த பாவங்கள் அகன்று பரிசுத்தியை அடைந்து விடுவான். ஸ்ரீருத்ரத்தை பதினொரு முறை ஜபித்தால் அதே க்ஷணத்தில் பரிசுத்தனுகி விடுவான் என்று ஸ்ம்ருதிகாரர்கள் கூறுகிறார் கள்.

வேரில் நீர் விட்டால் கிளைகள் துளிர்த்துப் பூத்துப் பழுப்பதுபோல் ஸ்ரீ பரமேச்வரன் ருத்ர ஜபத்தால் திருப்தி அடைந்தால் அவரது அவயவ ங்களான தேவர்கள் யாவரும்திருப்தி அடைகிறார்கள் என்று ஸூத ஸம் ஹிதை கூறுகிறது.

எந்த விருப்பங்கள் நிறைவேற வேண்டும் என்று ஸங்கல்பம் செய்து கொண்டு ருத்ரத்தை ஜபிக்கிறுனே அந்த விருப்பங்கள் நிறைவேறி விடு கின்றன. ஆதலால் பாவம் விலக விரும்புகிறவன்,வியாதிநீங்க விரும்பு கிறவன், பொருளை விரும்புகிறவன், மனக்கவலைப் போக்கிக் கொள்ள விரும்புபவன், நீண்ட ஆயுளை விரும்பு

பவன், ஆரோக்யத்தை விரும்புகிற வன் ஸ்ரீருத்ரத்தை ஜபித்தால் எல்லா வற்றையும் அடைவான் என்று கூறப் படுகிறது.

யத்ய நிச்சன் ஜபேத் தத்ததாப்னோதி
ஹி ந ஸம்சய:
ததேதத் பாப க்ஷயார்த்தி, வ்யாதி-
மோசனார்த்தி,
ஸ்ரீகாம: சாந்திகாம: ஆயுஷ்காம:
ஆரோக்யகாம:
ஸ்ச குர்யாத் ஏதத் ஸர்வமாப் னோதி.

இப்படிப்பட்ட பெருமையும், மகிமையும் வாய்ந்த ஸ்ரீ ருத்ரத்தில்,

நம: சங்கராய ச மயஸ்கராய ச

என்ற ஒரு வாக்கியம் காணக்கிடைக்கிறது.

தாய் தந்தை முதலிய உருவமாக இருந்து சுகத்தை அளிப்பவரும், ஆசாரியன், வேத சாஸ்திரங்கள் இந்த உருவமாக இருந்து மோக்ஷத்தை அளிப்பவரான ஸ்ரீ ருத்ரனுக்கு நமஸ்காரம் என்று இதற்குப் பொருள்.

ஆபத்துக் காலங்களில் தன்னை வழிபடுகிறவர்களைக் காக்க ஸ்ரீ பரமேச்வரன் தாய், தந்தை உறவினர் இவர்கள் உருவத்தில் பாதுகாக்கிறார் என்பது பெரியோர்கள் வாக்கு. தென்னாட்டிலே ஸ்ரீ ரங்கம் என்னும் திவ்ய தேசம் எவ்வளவு அனுபவித்தாலும் தெவிட்டாத அமுதமாய் கருணையே வடிவு கொண்டாற் போன்ற ஸ்ரீ ரங்கநாதன் திவ்ய வாஸம் செய்யப் பெற்றது. பிரும்மாவினால் இக்ஷ்வாகு என்னும் அரசருக்கு அளிக்கப்பட்டது. ஸ்ரீ ராமராலும் வணங்கி ஆராதித்த பெருமையுடையது. அவருக்குத் துணையாய் நின்று உதவிய விபீஷணனுக்குத் துணையானது. வேறு எங்கும் பெற முடியாத பலன்களை எல்லாம் அளிக்க வல்லது. பிரணவ வடிவம் கொண்ட விமானத்தோடு சேர்ந்து நிற்பது. ஸகல பாபங்களையும் போக்க வல்லது. இத்தகைய திவ்ய தேசம் மற்ற திவ்ய தேசங்களுள் தலை சிறந்து நிற்கப் பெற்றது.

''ஆராத அருளமுதம் பொதிந்தகோயில்
அம்புயத்தோன் அயோத்தி மன்னற்கு
அளித்தகோயில் தோலாத தனிவீரன்
தொழுத கோயில் துணையான
வீடணற்கு
துணையாங்கோயில் சேராத பயனெல்
லாம்
சேர்க்கும் கோயில் செழுமறையின்
முதலெழுத்துச்
சேர்ந்த கோயில் தீராத வினை
யனைத்தும்
தீர்க்கும் கோயில் திருவரங்கம்
எனத்திகழும் கோயில்தான்''

இப்படிப்பட்ட திருவரங்கத்தில் எம்பெருமான் பள்ளிகொண்டிருக்கும் திருப்பாங்கை தேசிகர் அனுபவிக்கும் அழகைக் காணலாம்.

எம்பெருமான் கண்ணனாய் அவதரித்து பிருந்தாவனப் பிரதேசங்களிலுள்ள அழகிய இடைப் பெண்களை எல்லாம் தன் வசமாக்கிக் கொண்டு பெரிய காமுகனாய் திரிந்தான். அப்பொழுது பிராணிகள் எல்லாம் தன்னை நெருங்கி அனுபவிக்கும்படி எளியவனாயிருந்தான்.

அக்காலத்தில் தன்னை அனுபவிக்கும் பாக்கியமற்று பிற்காலத்தில் பிறந்தவர்கள் தன்னை எவ்வாறு அனுபவிப்பது? அதற்காகவே திருவரங்கத்தில் அர்ச்சாவதார வடிவத்துடன் அவதரித்து திருவனந்தாழ்வான்மீது பள்ளி கொண்டான்.

பெரிய காமுகனான இவன் பெரிய பிராட்டியை கணப்பொழுதும் பிரிவானா? ஆதலால் அவளுடன் திருவரங்கனாய் அவதரித்து பள்ளி கொண்டு எல்லா ஜீவராசிகளையும் கவர்ந்து அவற்றுக்கு நல்வாழ்வை அளிக்கின்றான்.

ப்ருந்தாணி ய: ஸ்வ வசயன் வ்ரஜ-
ஸுந்தரீணாம் ப்ருந்தாவனாந்தர-
புவாம் ஸுலபோபபூவ

ஆஹோபிலம் ஸ்ரீ நரஸிம்ம சுவாமி ஆலயம்; ஸாவண துர்க்கா (கர்நாடக மாநிலம்)
திரு. எம். பி. அன்னய்யா—மாண்டியா.



ஸ்ரீமாநசேஷ ஜனஸங்கரஹணய சேதே
ரங்கே புஜங்க சயனோ ஸ மகாபுஜங்க: ।

(ந்யாஸதிலகம்)

இப்படிப்பட்ட மகிமை வாய்ந்த ஸ்ரீ ரங்க க்ஷேத்திரத்திற்கும், சங்க காலத்து மன்னன் கோச்செங்கட் சோழனால் கட்டு விக்கப்பட்டதும், அகிலாண்டேச்வரி அம்பிகைக்கு ஆதி சங்கரர் தாடங்கப் பிரதிஷ்டை செய் யப்பட்டதும் ஜம்பு கேச்வரம் என்ற பெயருடன் விளங்கும் திருவானைக்கா க்ஷேத்திரத்திற்கும் அருகில் காவிரிக் கரையில் அமைந்த நகர் திருச்சிராப் பள்ளி யாகும். அந்நகருக்கு அணி யாக விளங்குவது மலைக்கோட்டை யாகும். அங்கிருந்து அருள் பாலித்து வரும் மகாலிங்கத்தின் திருநாமம் மாத்ருபூதேச்வரர் அல்லது தாயு மானவர் என்பதாகும். அந்த திரு நாமம் அவருக்கு ஏற்பட்டதற்கு, தல புராணம் ஒரு நிகழ்ச்சியைக் குறிப் பிடுகிறது.

திருச்சி நகரிலே ரத்னவளி என்ற வைச்யகுலத்தில் தோன்றிய பெண் ஒருத்தி வாழ்ந்து வந்தாள். அவளுக்கு எல்லாச் செல்வங்களும் நிரம்பியிருந் தும் பிள்ளைப்பேறுமட்டுமில்லை.

அவளோ ஒவ்வொரு நாளும் ஆறு காலங்களிலும் நடக்கும் பூஜைகளி லும் கலந்து கொண்டு பரமேச்வரனை தரிசனம் செய்து வந்தாள். தனக்கு ஒரு குழந்தை பிறக்க வேண்டும் என்று மனம் உருகி வேண்டிக் கொண் டாள். அதன் பயனாக அவள் கர்ப்பம் தரித்தாள். பத்து மாதமாகியது. பிரசவ சமயத்தில் தனக்கு உதவி செய்ய வரும்படி தன் தாய்க்குக் கடிதம் எழுதியிருந்தாள். வரும் பொழுது தனக்குப் பிடித்த தின்பண் டங்களைச் செய்து வரும் படியும் வேண்டிக் கொண்டாள்.

தாயார் மகளுடைய கடிதத்தைக் கண்டு அகமகிழ்ந்தாள். தின்பண் டங்கள், மருந்து வகைகள் எல்லா வற்றையும் எடுத்துக் கொண்டு தன் மகளைக் காணப்புறப்பட்டாள்.

அப்பொழுதுமழைக்காலம். காவிரி, கொள்ளிடம் இரண்டு ஆறுகளிலும் பூர்ணப் பிரவாகம் பெருகிக் கொண் டிருந்தது. உடைப்பு எடுத்து கிராமங் கள் திருச்சி நகரம் எங்கும் வெள்ளம் புகுந்துவிட்டது.

காவேரிப் பூம்பட்டினம் என்ற ஊரில்தான் ரத்னவளியின் தாயார் வசித்து வந்தாள். வெள்ளத்தினால் வீட்டை விட்டு வெளியே வர முடி யாமல் தவித்தாள். அக்காலத்தில் காவிரி, கொள்ளிடம் இரண்டிற்கும் நடந்து செல்லும் பாலம் அமைக்கப் படவில்லை. பரிசல் மூலமாகத் தான் போக்குவரத்து நடந்து வந்தது. பெருகி ஓடும் வெள்ளத்தில் படகு விட மறுத்துவிட்டார்கள் ஓடக் காரர்கள். அதனால் மனம் புழுங் கினாள் தாய். தன் பெண்ணிற்குக் கெடுதி ஒன்றும் ஏற்படாமலிருக்க வேண்டும் என்று மனமார வேண்டிக் கொண்டாள். அதைத் தவிர அவ ளால் வேறு என்ன செய்ய முடியும்? வெள்ளம் வடிந்ததும் செல்லத் தீர் மானித்தாள்.

ரத்னவளிக்கோ பிரசவ காலம் நெருங்கியது.

தாயைத் தவிர ரத்னவளிக்கு வேறு நெருங்கிய உறவினர் கிடை யாது.

பிரசவ வேதனை தாங்காமல் வாய் விட்டுக் கதறினாள். "பரமேச்வரா! உன்னைத் தவிர எனக்கு உதவுபவர் வேறு யாருமில்லை. நீ தான் என்மீது கருணை செய்ய வேண்டும். கருணா மூர்த்தியே! என்னைக் கஷ்டத்தி லிருந்து காப்பாற்று" என்று அலறி னாள்.

"அன்யதா சரணம் நாஸ்தி
த்வமேவ சரணம் மம ।
தஸ்மாத் காருண்ய பாவேன
ரக்ஷரக்ஷதயாநிதே
ரக்ஷ ரக்ஷ க்ருபா நிதே.

ஆறுகால பூஜையிலும் தன்னை வழிபட்டு வரும் தன் பக்தை இப்படி அலறுவதை அவர் பொறுப்பாரா! அதுவும் இந்த ஆபத்துக் காலத்தில் கைவிடுவாரா?

உடனே அவர் ரத்னவளியின் தாயின் உருக்கொண்டார். கங்கை யையும் பார்வதியையும் உதவிக்கு மருத்துவப் பெண்களாகச் செய்து அவர்கள் தலையில் ரத்னவளி விரும் பிய தின்பண்டங்களை வைத்து கொண்டு அவள் வீட்டில் நுழைந் தார்.

பிட்டுக்கு மண் சுமந்த கருணா மூர்த்தி அல்லவா! ஹம்ஸஸ்ஸோ ஹம், ஹம்ஸஸ்ஸோஹம் ஹம்ஸோ ஹம் என்று உரக்கக் கூறும் தன் தாயின் குரலை ரத்னவளி கேட்டாள்.

உடனே 'அம்மா' என உரக்க அழைத்தாள்.

பரமேச்வரன் 'நான் வந்துவிட் டேன். தின்பண்டங்களும் கொண்டு

(44-ம் பக்கம் பார்க்க)

# காவிரிக் கரையினிலே!

'கங்கையிற் புனிதமாய காவேரி' குடகு நாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள பிரம்மகிரிக் குன்றில் தலைக் காவேரி என்னும் பெயரில் தோன்றுகிறது. இந்நதியின் நீளம் சுமார் 475 மைல்கள். காவேரியின் சிறப்பை தொண்டரடிப் பொடியாழ்வார், இளங்கோவடிகள், பட்டினப்பாலை ஆசிரியர், குலசேகராழ்வார் ஆகிய பெரியோர்கள் சிறப்பாகப் பாடியுள்ளனர்.

கவேரன் என்ற அரசன் பிரம்ம தேவனை நோக்கி பெரும் தவமிருக்க, பிரம்மன் அவருக்கு 'லோபா முத்திரை'யை தர, அவளை அகஸ்தியருக்கு மணம்செய்து கொடுத்தார், கவேரர். 'லோபா முத்திரை' விஷ்ணு மாயையின் அம்சம். அவளே தன்னை இரு உருவங்கள் ஆக்கிக் கொண்டாள் என்றும் கூறுவர். ஓர் அம்சம் லோபா முத்திரை; மற்றொன்று காவேரி என்ற புனித நீராய் அகத்தியர் கமண்டலத்தில் அமைந்தது.

ஒரு காகம் அக் கமண்டலத்தின் மீது பாய்ந்து அதைக் கவிழ்த்து விடவே, நீர் கீழே ஓடத் தொடங்கிற்று. இதுவே திருமாலின் உருவமான நெல்லி மரத்தின் அடியிலிருந்து காவேரியாய் முன்னேறிற்று. காவேரியோடு பாகமண்டலத்தில் கனகா என்னும் நதியும், சஜ்யோதி என்னும் நதி மறைமுகமாயும் இதோடு கலப்பதாக ஐதிகம். இதன் முக்கிய உப நதிகள் ஹேமாவதி பனஹள்ளியிலும், லோகபவானி ஸ்ரீனிவாசபுரத்திலும், ஷிம்ஸா நதி சிவசமுத்திரத்திற்கருகிலும், தொப்பை ஆறு பாலையூருக்கு அருகிலும், சரபங்கா காவேரிப் பட்டிணத்திற்கருகிலும் கலக்கின்றன.

காவேரி மூன்று இடங்களில் இரண்டு பிரிவாகச் சென்று பிறகு ஒன்றாகக் கூடியுள்ளது. அவ் விடங்களில் மூன்று தீவுகள் உள்ளன. அவை மூன்றும் மிகப் புனிதமானத் தலங்களாகக் கருதப்படுகின்றன. அத்தீவுகள் ஆதிரங்கம், மத்தியரங்கம், அந்தரங்கம் எனப்படும்.

ஆதிரங்கம் ஸ்ரீரங்கப்பட்டிணம், மத்தியரங்கம் சிவசமுத்திரம், அந்தரங்கம் ஸ்ரீரங்கம். இம் மூவிடங்களிலும் திருமால் பாம்பணைமேல் பள்ளி கொண்ட கோலத்தில் எழுந்தருளியுள்ளார்.

ஸ்ரீரங்கப்பட்டிணத்தில் ஸ்ரீரங்கநாதருக்கு மாலையாக இரு நதிகள் அமைந்துள்ளன. வடமேற்குத் திசையில் காவேரி பிரிந்து, தென் கிழக்குத் திசையில் மூன்று மைல்களுக்கப்பால் சேருகிறது. காவேரி அம்மனின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீரங்கநாதன் இங்குப் பள்ளி கொண்டிருக்கிறார். இத் தலத்திற்கு பஸ்சிம ரங்கக்ஷேத்திரமென்றும் கூறுகிறார்கள். மேற்கே பஸ்சினிவாகினியும், கிழக்கே பூர்வ நதியும், அரங்கனை அணைத்துக் கொண்டிருக்கின்றன. கௌதம ரங்கக்ஷேத்திரமென்றும் மற்றொரு பெயருண்டு. கௌதம ரிஷிக்கு அரங்கர் காட்சியளித்ததாகவும் புராண வரலாறு கூறுகிறது. காவேரியில் வடகரையில், வட மேற்குப் பகுதியில் கௌதம க்ஷேத்திரம் உள்ளது.

மத்தியரங்கமான சிவசமுத்திரம் ஒரு தீவு. தீவைச் சுற்றி காவேரி இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து அதாவது பார்சுக்கி, கனகசுக்கி என்ற இரு பெரு நீர்வீழ்ச்சிகளாய் இரு நூறு அடி ஆழத்தில் பாய்ந்து மீண்டும் ஒன்று கூடுகிறது. இத் தீவு மூன்று மைல் நீளமுள்ளது, முக்கால் மைல் அகலமுள்ளது. ஜகன் மோகன ரங்கநாதர் பள்ளி கொண்டிருக்கிறார். இந்தக் கோவிலுக்குக் கோபுரம் இல்லை. காவேரி அம்மனின் விக்கிரகம் இங்கு உண்டு.

அந்தி அரங்கமான திருவரங்கம், காவேரி, கொள்ளிடம் ஆகிய இரண்டு ஆறுகளுக்கு இடையில் கோயில் அமைந்துள்ளது. இவ்வரங்கை ஆழ்வார்கள் பன்னிருவரில் பதினொருவர் இவ்வரங்கைப் பாடியுள்ளனர். இவ்வரங்கிற்கு, பூலோக வைகுண்டம், போக மண்டலம் என மறு பெயருகளுமுண்டு.

விபிஷணாழ்வான் அயோத்தியிலிருந்து இலங்கை போகும் வழியில் உபய காவேரி மத்தியில் எம்பெருமானை விமானத்துடன் வைக்கவே, அரங்கநாதர் புடைபெயராது திருமுள்ளமுவந்து தங்கியுள்ள இடமே திருவரங்கம்.

திரு. கே. ஆர். ஜெயவேலு,
ஆத்தூர்.

திருமால் விரும்பியபடியாலும், திருமகளுக்கு உகந்த அரங்கமாயிருந்ததாலும், ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுக்கு அரங்கமாயிருந்ததாலும், ஆற்றுக் கிளைகளின் மத்தியிலிருந்ததாலும், இதற்குத் திருவரங்கம் என்பது பெயர் என அறிஞர் கூறுவர்.

அடுத்தது, திருவானைக்கா: இதனை ஞான பூமியென்றும், பஞ்ச பூதத் தலங்களுள் நீரில் அமைந்ததால் 'அப்புத்தலம்' எனவும் வழங்

குவர். இங்குள்ள இறைவருக்கு சம்புகேஸ்வரர் என்றும் (அ) அப்பு லிங்கம் என்றும் இறைவிக்கு அகிலாண்டவல்லி என்னும் திருநாமங்கள் வழங்கப்படுகின்றன. இங்குள்ள மடப்பள்ளியில் காளமேகத்திற்கு அம்பிகை அகிலாண்டவல்லி அருள அவர் கவி காளமேகப்புலவரானார் என்கிறது வரலாறு. இங்கு இறைவனே சித்தராக வந்து திருநீற்றினைக் கூலியாகக் கொடுத்து கட்டப்பட்டதால் 'திரு நீற்று மதில்' என்றும் உள் பிரகாரத்திற்கு விபூதிப் பிரகாரம் எனவும் வழங்குகின்றன.

அடுத்தது திருஅன்பில்! இங்கு சத்தியலோக வாசியாகிய பிரம்மனும் வாகீசரும் பூஜித்தமையால் இறைவன் சத்தியவாகர், இறைவி சௌந்திரநாயகி எனப்பெயர் பெற்றனர்.

திருக்கரம்பனூர்: இங்குக் கதப்ப மகரிஷி ஒருமையுடன் புருஷோத்தமனின் திருவடியைக் கண்மூடி மௌனியாத்தவம் செய்தார். அவரது திருவுருவமும் இங்கு உள்ளது. இங்கு பிரம்மாவுக்குக் கோயில் உண்டு.

புள்ளம்பூதங்குடியிலுள்ள இறைவனது திருநாமம் வல் வில் ராமர். இறைவி பொற்றாமரை. இங்கு ஸ்ரீராமபிரான் ஜடாயுக்கு மோட்சம் அருளியதாக ஐதீகம். இங்கு ஸ்ரீராமன் சயனித்து உள்ளார். இங்கிருந்து ஒரு கல் தொலைவில் திருமண்டலங்குடி ஊரில் தொண்டரடிப் பொடியாழ்வார் பிறந்தருளினார்.

திருஆதனூர் இறைவன் ஆண்டளக்கும் ஐயன் மரக்கால் ஒன்றை சிரசடியில் வைத்துக்கொண்டு சயனத் திருக்கோலத்தில் அரங்கநாயகி தாயாருடன் காட்சி அளிக்கிறான்.

திருக்குடந்தை எனும் கும்பகோணம் காவேரி ஆற்றங்கரையினில் உள்ளது. இங்குச் சாரங்கபாணிப் பெருமாள் எனும் பெயரில் கோமளவல்லித் தாயாருடன் சயன நிலையில் காட்சி தருகின்றார்; திருமழிசை யாழ்வாரின் வேண்டுகோள் இறைவனின் செவியில் விழ சயனத் திருந்த இறைவன் எழ, உடனே திருமழிசை யாழ்வார்,

"நெஞ்சு உருகி, உள் கனிந்து
எழுந்து, ஓர் அன்பில் அன்றி,
ஆழியானை யாவர் காண வல்லவரே"?

என மனம் உருகிப் பாடுகின்றார்.

அடுத்தது சக்கரபாணி சுவாமி கோவில்! இங்கு ஆண்டவன் அஷ்ட புஜங்களுடன் ஒவ்வொரு கையிலும் ஆயுதம் ஏந்தி ஜகஜ்ஜோதியாய் நிற்கிறான்.

ஸ்ரீராமர் கோவிலுள்ள இராமாயண சித்திரங்களின் விளக்கமும், சித்திரமும் காண்போரது மனதையும் கருத்தையும் சுண்டியிழுக்கும். இங்கு ஸ்ரீராமபிரான் பட்டாபிஷேகக் கோலத்தில் காட்சியளிக்கின்றான். அநுமன் தன் வலக் கையில் வீணையும், இடக் கையில் இராமாயணக் காவியமும் கொண்டுள்ளார்.

திருமயிலாடுதுறை: இறைவனுக்கு திருமயிலாடுதுறை உடையார், மாயூரநாதர் எனப் பெயரும், நாயகிக்கு அபயாம்பிகை, அஞ்சல் நாயகி என்னும் திருநாமங்கள். அம்மை அபயாம்பிகை மயில் வாகன உருவாகக் கொண்டு இறைவனை வழிபட்ட தலம். இங்கு அம்மையின் வேண்டுகோளுக்கிரங்கி, இறைவன் மயில் உருக்கொண்டு தாண்டவமாடினார். இதற்கு கௌரீ தாண்டவம் எனப் பெயர் வழங்கி வருகிறது. காவேரியில் இடப தீர்த்தத்துறை விசேடம்.

திருஇந்தளூர்: சந்திரனுடைய சாபம் இத் தலத்தில் நீங்கினபடியால் 'இந்தளூர்' என்ற பெயர் இத் தலத்திற்கு நிலைத்தது. இங்குள்ள இறைவனுக்கு பரிமளரங்கன், மருவினியமைந்தனென்றும், சுகந்தவனநாதன் என்றும், அந்தியரங்கன் என்றும் பெயர்கள் வழங்குகின்றன. மூலவருக்கு நான்கு புஜங்கள் நன்கு காட்சியளிக்கின்றன; இறைவி புண்டரீகவல்லித் தாயார் என்பது;

வைணவத் தலங்கள் 108ல் 27 தலங்களில் இறைவன் சயனக் கோலத்தில் காட்சியளிக்கின்றார். அவற்றில் சில காவேரிக் கரையில் இருக்கின்றன:

காவேரியைப் பாடிய தியாகய்யா, அவரைத் தன் அருகிலேயே வைத்துப் பராமரித்தாள் காவேரி.

ராமர் காவேரிக் கரையில் வந்து தங்கியதாகவும், சஞ்சரித்ததாகவும், ஐதீகங்கள்.

வைஷ்ணவக் கோவில் மட்டுமே உள்ள இடங்கள் ஒன்று திருமலை. அடுத்தது ஸ்ரீரங்கமாம் திருவரங்கம். திருவரங்கன் கோவில் மூலஸ்தானம் முட்டை வடிவில் உள்ளது. இதைச் சுற்றி ஏழு பிரகாரங்கள் உள்ளன. இந்தியாவிலேயே இவ்வித அமைப்புப் பெற்ற கோவில் இது ஒன்றே எனலாம்.



திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்கள் எளிதில் தெரிந்து கொள்ளும் வகையில், திருமலையில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச சத்திரங்களுக்குக் கீழ் வருமாறு பெயரிடப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| முதல் சத்திரம் : | சுதர்ஸன் |
| இரண்டாம் சத்திரம் : | கோவர்த்தன் |
| மூன்றாம் சத்திரம் : | கல்யாண் |

# வாழ்விக்கும் காவிரி

ஸ்ரீ குருவாயூரப்பதாஸன்

ரிக் வேதத்திலும் தைத்ரீய அரண்யகம் பத்தாவது பகுதி முதலாவது அனுவாகத்திலும் பத்து ஜீவ நதிகளைக் குறிக்கும் கீழ்க் கண்ட சுலோகம் காணப்படுகிறது. அது பின் வருமாறு :

'இமம்மேகங்கே – யமுனே – ஸரஸ்வதி – சுதுத்ரி – ஸ்தோமம் ஸசதா பருஷ்ணியா – அஸிக்னியா – மருத்வ்ருதே – விதஸ்தயா–ஆர்ஜி கீயே–ச்ருணு ஹ்யாஸுஷோமயா'

கங்கை, யமுனை, ஸரஸ்வதி, சுதுத்ரி என்றும் சதத்ரு என்றும் கூறப்படும் ஸட்லஜ், அஸிக்னி எனப்படும் சீனப் நதி, பருஷ்ணி எனப்படும் ராவி நதி, விதஸ்தா எனப்படும் ஜீலம் நதி, ஆர்ஜிகீயா, ஸுஷோமா எனப்படும் வட இந்திய நதிகள் ஆகியவற்றுடன் ரிக் வேதம் காவிரி நதியை மருத்வ்ருதா என்று அழைக்கிறது. 'மருத்' என்றால் காற்று என்று பொருள்படும்; 'வ்ருதா' என்றால் விரிவடைந்தவள். காற்றினால் விரிவடைந்தவள் 'காவிரி' என்று ரிக்வேதம் கூறுகிறது.

அகஸ்திய முனிவர் ஸஹ்யாத்ரி மலைச் சரிவில் தமது நீர்ப் பாத்திரத்தை வைத்தபோது அதனை ஒரு காகம் கவிழ்க்க அதனுள்ளிருந்து பெருகியது காவிரி என்றொரு வரலாறும் உண்டு. காகத்தினால் விரிந்ததால் காவிரி எனப்பட்டதாம்.

'கா' என்றால் சோலைகள் என்று பொருள்படும். தான் பாயும் வழியே சோலைகளை நன்கு வளர்த்து விரிவடையுமாறு செய்வதால் காவிரி என்றும் பெயர் ஏற்பட்டதாகவும் கூறுவர்.

பிரம்மதேவனின் மானஸ குமாரியாக தோன்றிய காவேரி பிறகு கவேரன் என்ற சோழ மன்னனின் மகளாக அவதாரம் செய்தாள். கவேரனின் பெண் ஆதலின் காவேரி என்று பெயர் பெற்றாள் என்பர்.

ரிக் வேதத்தின் ஒரு பகுதி, அகஸ்திய முனிவரின் கட்டளைப்படி அவர் மனைவி லோபா முத்திரையே காவேரியாக மாறி மக்களின் பாவம் தொலைத்துத் தன் நீர்ப் பெருக்கால் உலகைச் செழிப்படையச் செய்த செய்தியைச் சுட்டுகிறது.

வால்மீகி பகவான் தம் ராமாயண மஹா காவியத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில் சுக்ரீவன் கூற்றாக தென் திசை சென்ற வானரங்கட்கு காவிரியின் பெருமை பற்றிக் கூறுகிறார். தெய்வத்தன்மை உடையதென்றும், தெளிவான தண்ணீரைக் கொண்டது என்றும் அப்ஸரஸ் ஸ்திரீகளால் சூழப்பட்டதென்றும் சுக்ரீவன் ஏனைய வானரங்களிடம் கூறுகிறான்.

மஹாபாரதத்தில் காவிரி ஸ்னான பலனும் ஆயிரம் பசுக்களை வேதவித்துக்கட்கு தானம் செய்த பலனும் ஸமம் என்ற செய்தி காணப்படுகிறது. பாகவதத்தில் காவிரி நீரைப் பருகுவோர் கிருஷ்ணபகவானின் பக்தராவர் என்ற செய்தி காணப்படுகிறது. பிரம்ம வைவர்த்தம் என்ற புராணம் காவேரி என்ற மூவெழுத்து மந்திரத்திற்குக் கீழ்க் கண்ட விளக்கம் தருகிறது. 'கா' என்பது பாவத்தைப் போக்கும் என்றும், 'வே' என்பது விரும்புவதை அளிக்குமென்றும், 'ரி' என்பது மோக்ஷத்தை அளிக்குமென்றும், பிரம்ம வைவர்த்தம் கூறுகிறது.

வராஹ புராணம், மலையமலைகளில் உற்பத்தியாகும் பன்னிரு நதிகளில் காவிரியே முக்கியமானதென்று கூறுகிறது; காளிகாபுராணம், வசிஷ்டரும் அருந்ததியும் திருமணம் முடிந்து ஐந்தாம் நாள் அவப்ருத ஸ்னானம் செய்ய இமயமலைக்குச் சென்றனர் என்றும் அப்போது பிரமன், விஷ்ணு, சிவன் மூவரும் கை கழுவிய நீர் ஏழு அருவியாகப் பிரிய அவற்றில் நீராடினர் என்றும், அவை ஏழுமே ஸிப்ரா, கண்டகி, கோமதி எனும் கோதாவரி, தேவிகா, ஸரயூ, இராவதி, காவேரி என்ற புண்ய நதிகளாகி பிறகு வெவ்வேறாக பல இடத்தில் பெருக் கெடுத்தன என்றும் கூறுகிறது.

ஹரி வம்சம், தகப்பனின் சாபத்தால் கங்கையில் பாதியாக காவேரி மாறினாள் என்றும் 'அர்த கங்கை' என்று பெயர் பெற்றதாகவும் கூறுகிறது. 'ஸ்ம்ருதி முக்தா பலம்' என்ற தர்ம சாஸ்திர நூல் காவேரி, துங்கபத்ரை, கிருஷ்ணா, கோதாவரி, கங்கை என்ற ஐந்துமே 'பஞ்ச புண்ய கங்கைகள்' என்றும் இவற்றில் உயர்வு தாழ்வு இல்லை என்றும் கூறுகிறது.

காளிதாஸர் ரகு வம்சத்தில் ரகுவின் தென்னாட்டு திக் விஜயத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, ரகுவின் மிகப் பெரிய பலம் மிக்க யானைகள் காவேரியில் மூழ்கின என்றும், அவற்றின் மதநீர் காவிரி நீருடன் கலந்து கடலை அடைந்ததால் காவிரி வினோத மணம் நிரம்பியவளாக ஆனதால் கடலை அடைந்ததும் நதிகளின்

கணவனுன ஸமுத்ரராஜனுல் சந்தேகிக்கப்பட்டாள் என்றும் புனைந்து கூறுகிறுர்.

காவிரி நதி பாயும் ஸ்ரீரங்கம், கும்பகோணம், திருவிடைமருதூர், மாயூரம், திருவெண்காடு, திருச் சாய்க்காடு ஆகிய திருத்தலங்கள் காசிக்கு ஸமமானதென்று கூறப்படு கிறது.

இனிப் பழந்தமிழ்ப் பனுவல்கள் பல, காவிரியின் பெருமை பாடு வதைக் காண்போம். சிலப்பதி காரத்தில் இளங்கோ அடிகள்,

''வாழி அவன் தன் வளநாடு
மகவாய் வளர்க்கும் தாயாகி
உய்க்கும் பேருதவி ஒழியாய் வாழி
காவேரி''

என்றும்,

பட்டினப்பாலையில் ருத்திரங் கண்ணனுர்,

''வான் பொய்ப்பினும் தான் பொய்யா
மலைத்தலைஇய கடற் காவேரி''

என்றும்,

முத்தொள்ளாயிரத்தில்,

''ஏங்கா முகில் பொழியா நாளும்
புனல் தேங்கும் காவேரி''

என்றும்,

முடத்தாமக்கண்ணியார்,

''சாலி நெல்லின் சிறை கொள்
வேலியாயிரம் விளையுட்டாகக்
காவிரி புரக்கும் நாடு கிழவோனே''

என்றும்,

புறநானூறு,

''புனிறுதிர்.........
பசும் பயிர் வளர்த்துப் பொன்கதிராக
ஆக்கும்பொன் கொழிக்கும் காவிரியே''

என்றும்,

கம்பராமாயணம்,

''எண்டிசையும் ஏழுலகம் எவ்வுயிர்க்கும்
உய்யக்குண்டிகையின் பொருஇல் காவிரி''

என்றும்,

திருநாவுக்கரசர்

''முத்திசையும் புனல் பொன்னி
மொய் பவளம் கொழித்து உந்த''

என்றும்,

சுந்தரர்,

''மலைக் கொள்ளருவி பலவாரி மணியும்
முத்தும் பொன்னும் கொண்டலைக்கும் திரைக் காவிரி''

என்றும்,

பெரியாழ்வார்,

''தழுப்பரிய சந்தனங்கள் தடவரை வாய்
ஈர்த்துக்கொண்டு தெழிப்புடைய காவிரி
வந்தடி தொழும் சீரார் அரங்கமே''

என்றும்,

திருமங்கையாழ்வார்,

''சந்தினெடு மணியும் கொழிக்கும் புனற் காவேரி''

என்றும்,

தொண்டரடிப்பொடி ஆழ்வார்,

''கங்கையிற் புனிதமாய காவிரி''

என்றும்,

சேக்கிழார் பெருமான்,

கங்கையாம் பொன்னியாம் கன்னி நீத்தமே''

என்றும்,

கூறுவதற்கு ஒப்ப பலபடியாகக் காவிரியின் பெருமை புகழ்ந்து பல ராலும் பேசப்படுகிறது. தலைக் காவேரியில் உற்பத்தியாகும் காவிரி பூம்புகாரில் கடலுடன் சங்கமிக் கிறது. பூம்புகார் என்பதை விரித் துரைக்கும்போது ''இந்நகரினுள் காவிரி புகும் ஆனுல் பகைவர் புகார். எனவே புகும்புகார் என்பது மருவிப் பூம்புகாரென ஆயிற்று'' என்று காவிரியின் மிகுந்த ஏற்றத் தைச் சிறப்பிப்பாரும் உண்டு. காவிரியின் இடையில் பல அணைகள் இருந்தாலும் கரிகாலன் கட்டிய கல் லணை பிரசித்தமானது. விஜய ராகவ நாயகன் எதிரியின் தலைகளை வைத் துச் சாந்தும் சுண்ணும்பும் பூசி இக் கல்லணையைப் பழுது பார்த்த வீரச் செய்தியும் உண்டு.

காவிரியின் ஏற்றம் ஆண்டு தோறும் ஐப்பசி மாதத்தில் அதிக மென்றும் இம்மாதம் நடக்கும் துலா காவேரி ஸ்னனம் மாயூரத்தில் மேலும் பிரசித்திமிக்கது என்றும் கூறுவர். கங்கையிற் புனிதமாய காவிரியில் நீராடி மும்மலங்களையும், இருவினைகளையும் களைந்து திருமலை வேங்கடவனின் அருள் நெறியில் நாம் என்றும் நிற்போமாகுக! ★

## ஏழரை நாட்டு சனி நீங்க!

நமஸ்தே கோணஸம்ஸ்தாய பிங்களாய நமோஸ்துதே।
நமஸ்தே பப்ருரூபாய க்ருஷ்ணுயச நமோஸ்துதே॥
நமஸ்தே ரௌத்ர தேஹாய நமஸ்தே சாந்த காயச।
நமஸ்தே யமஸம்ஜ்ஞாய நமஸ்தேஸௌரயே விபோ॥
நமஸ்தே மந்தஸம்ஜ்ஞாய சநைசக்ர நமோஸ்துதே।
ப்ரஸாதம் மம தேவேச திநஸ்ய ப்ரண தஸ்யச॥

இந்த சுலோகம் 'சனி ரஹஸ்ய ஸ்தோத்ரம்' எனப்படும். இதனை பிப்பலாதர் என்பவர் இயற்றியுள்ளார். ஏழரை நாட்டுச் சனியுள்ளவர் கள் மேற்காணும் ஸ்தோத்ரத்தை பாராயணம் செய்து பிரதி தினமும் ஒரு முறையாவது சொல்லி வருவார்களானுல் அவர்களது தொல்லைகள் குறைந்து, சுபிட்சம் அடைவர்.

*சில பழைய ஏடுகளிலிருந்து எடுத்தெழுதி அனுப்பியவர்:*
**திரு. பா. முத்துக்குமரன், காட்டுக்கோட்டை.**

# ★ தீப ஒளித் திருநாள் ★



தீபாவளி என்றால் தீப வரிசை. தீபமாகிய விளக்குகளை வரிசை வரிசையாக வைத்து இந்த விழாவை ஒரு காலத்தில் கொண்டாடினார்கள். இன்றும் வட நாட்டில் இந்த முறை கையாளப்படுகிறது. புற இருளைப் போக்குவதற்கு விளக்கு. அக இருளைப் போக்குவதற்கு மகிழ்ச்சியாகும் ஞானமாகிய தீபத்தை நம் நெஞ்சத்தில் ஏற்றி வைத்து அஞ்ஞான இருளை அழித்தொழிக்க வேண்டும் என்பது இதன் உட்பொருள்.

தீபாவளியன்று கண்ணபிரான் உலகத்தை நரகமாக்கி வந்த நரகாசுரனை வதம் செய்தார் என்பது பாகவதக் கதையாகும்.

ஹிரண்யாக்ஷனை வதைக்கும் பொருட்டு வராக உருவமெடுத்து வந்த திருமால் தன் கொம்பின் நுனியில் பூமி தேவியைத் தாங்கினார். அவரது ஸ்பரிசத்தின் மஹிமையால் பூமிதேவிக்கும் வராஹப்பெருமானுக்கும் மகனாகப் பிறந்தவன் நரகாசுரன். இவன் எல்லையற்ற வரங்கள் பெற்று மூவுலகையும் தன் கீழ்க் கொண்டு வந்து ஆட்சி நடத்தினான். பெண்டிரை மட்டும் சிறுமையாக எண்ணி அவர்களைத் தவிர்த்து ஏனைய யாவராலும் மரணமின்மையை வரமாக இவன் பிரம்மதேவனிடம் பெற்றிருந்தான் என்பதும் கருதத்தக்கது.

பிராக் ஜ்யோதிஷபுரம் என்ற பகுதியில் இவன் தலைநகரை அமைத்துக் கொண்டான். தற்போதைய ஜப்பான் பகுதி இது என்று கூறலாம். ஸ்ரீராமாவதார காலத்தில் வானரர்களாக வந்து உதவிய மைந்தன், த்விவிதன் என்ற வானரர்களை இவனுக்கு மந்திரிகளாக இருந்து வந்தனர். நரகாசுரனின் கொடுமை பொறுக்க முடியாமல் தேவர்கள் ஸ்ரீமஹாவிஷ்ணுவிடம் இறைஞ்சினார்கள். திருமாலும் அபயம் அளித்தார்.

அதன்படி ஸ்ரீகிருஷ்ணாவதார காலத்தில் ஸத்யபாமையைத் திருமணம் புரிந்து கொண்டவுடன் நரகனின் பட்டணத்திற்கு பாமையுடன் படை எடுத்தார். ஸ்ரீ பாகவதத்தின் சாராம்சமான நாராயணீயம் என்ற கிரந்தத்தில் மேப்பத்தூர் நாராயண பட்டதிரி கீழ்க்கண்டவாறு குருவாயூரப்பனிடம் கேட்கிறார்.

'' சதுர்தந்தைர் தந்தா வலபதிபி
ரிந்தான ஸமரம்
ரதாங்கேன சித்வா நரக-
மகரோஸ்தீர்ண நரகம் '' *(81-7)*

''ஹே குருவாயூரப்பா! நான்கு தந்தங்களையுடைய சிறந்த யானைகளுடன் வெகு நீண்ட நேரம் யுத்தம் செய்து அளவற்ற பராக்கிரமசாலியாக அவற்றை வெற்றி கொண்ட நரகாசுரனுடன் தாங்கள் யுத்தம் செய்து (ஸத்யபாமை மூலம்) அவனை நரகத்தைத் தாண்டும்படி செய்து கொன்றீர்களாமே'' என்று ஸ்ரீபட்டதிரி கேட்க ஸ்ரீ குருவாயூரப்பனும் 'ஆமாம்' என்று தலையை அசைத்து அங்கீகரித்திருக்கிறார்.

இவ்விதம் நரகாசுரனை வதம் செய்த பிறகு அவன் இறக்கும் தருவாயில் தான் உயிர் நீங்கிய அந்த தினம் மக்களால் உற்சாகமாகக் கொண்டாடப்படவேண்டும் என்று வரம் கேட்டான். பகவானும் அவ்விதமே வரமளித்தார். நரகன் இறந்தவுடன் அவன் தாயான பூமிதேவி ஸ்ரீகிருஷ்ணனை ஸ்தோத்ரம் செய்தாள். நரகனின் மகனான பகதத்தன் என்பவனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்வித்து நாட்டைஅவனிடம்ஒப்புவித்துவிட்டு பாமையுடன் கண்ணன் துவாரகை திரும்பினான். (இந்த பகதத்தன் திருமாலிடம் எல்லையற்ற பக்தியுடன் இருந்தான். ஒப்புயர்வற்ற வீரனும் குணவானுமான இவன் தன் முதிய வயதில் பாரத யுத்தத்தில் கௌரவ சேனைகளுடன் சேர்ந்து போர்க்களத்தில் வீரமரணமடைந்தான்)

தேவமாதாவான அதிதியின்காதில் விளங்கிய தேவகுண்டலங்களை நரகாசுரன் கவர்ந்திருந்தான். அவற்றை கிருஷ்ணன் அதிதியிடம் ஒப்படைத்தார்.

இவ்விதம் நரகாசுரன் வதமான தினம் தீபாவளி என்று நம்மால் இன்றும் பெருமகிழ்ச்சியுடன் கொண்டாடப்படுகிறது. புத்தாடைகளை வயது வித்தியாசமின்றி அனைவரும் புனைந்து பெருமகிழ்வடைகிறோம். சிறுவர் சிறுமியர் பட்டாசு மத்தாப்பு வாண வேடிக்கைகளைப் பலமாதம் முன்பே ஆவலுடன் எதிர்பார்த்து,தீபாவளித் திருநாளில் தம் மனம் போல ஆர

திரு. பி. சுந்தரராமன், M.A., B.Ed.,
பழமார்னேரி

வாரத்துடன் இப்பண்டிகையை கொண்டாடுகின்றனர். தமிழர்த் திரு நாள் பொங்கல்தான்; தீபாவளி யன்று என்று மேடைகளில் வாதிடும் பலரும் கூட தீபாவளியன்று புத் தாடை அணிந்து இதனை மனைவி மக்க ளுடன் கொண்டாடத் தவறுவதில்லை.

தீபாவளி நீராடலை கங்கா ஸ்நா னம் என்று சொல்கிறோமே? ஏன் என்றால் அந்தப் புனிதமான வேளை யின் மஹிமையால் சாதாரண வெந் நீரும் கங்கை நீராகி நம் பாவங் களைத் தொலைத்தெறிகிறது என்றே கொள்ள வேண்டும்.

தீபாவளியை வணிகர் திருநாள் என்றும் கொள்ளலாம். அன்று தொடங்கும் காரியம் லாபகரமாகத் தான் முடியும் என்ற நம்பிக்கை வட இந்தியாவில் பெரிதும் நிலவு கிறது. எனவே அன்று புதிய கணக்கு தொடங்குகிறார்கள். லக்ஷ்மி தேவி யையும், குபேரனையும் அன்று குஜராத்தி வர்த்தகர்கள் பூஜிக்கிறார் கள். தீபாவளியன்று இரவு கண் விழித்துச் சூதாடித் தங்கள் அதிருஷ் டத்தைப் பரிசோதித்து மேலும் நஷ்டமடைபவர்களும் உண்டு.பெரும் லாபம் அடைபவர்களும் உண்டு. இத் தகையோர் மார்வாடிகளில் ஏராளம்.

நண்பர்களையும் உறவினர்களையும் தீபாவளியன்று சந்தித்துத் தாம் பூலம், சந்தனம், சிற்றுண்டிகள் பெற்றுத் திரும்புகிறோம். பல புதிய நண்பர்கள் அறிமுகமாகிறார்கள், பழைய பகைமை மறக்கப்படுகிறது. இந்த வகையில் விருந்தோம்பல் போன்ற அரும் பண்புகளை தீபாவளி வளர்க்கிறது; சமுதாய ஒருமைப் பாட்டிற்கு வித்திடுகிறது.

நடுத்தர வர்க்கத்தினரும், ஏழை மக்களும் கூடக் கடன் வாங்கியாவது இப்பண்டிகையை சிறப்புற நிறை வேற்றுகின்றனர். தத்தம் குழந்தை கள் ஆனந்தக் களிப்பில் மூழ்கும் போது அவர்கள் முகத்தை மத்தாப்பு வெளிச்சத்தில் பெற்றோர் கள் பார்த்து மகிழும் போது அவர் கள் பட்ட கடன் கவலை எங்கோ ஓடி மறைகிறது.

புதுமணத் தம்பதிகளுக்குத் தலை தீபாவளி ஒரு இனிமையான அனுப வம். திருமணமாகிச் சில மாதங்களே ஆகியிருக்கும் தம்பதிகள் இந்நாளில் கூடி மகிழ்ந்து இன்பம் துய்க்கின்ற னர். இந்நல்ல நாளில் பரிசுகள் வழங்குவதும், அஞ்சல் மூலம் வாழ்த் துக்கள் அனுப்புவதும், ஊழியர் கட்கு இனாம் வழங்குவதுமாக தீபா வளி புதிய மெருகுடன் பொலிகிறது. இத்தகைய ரசனைமிக்க உணர்வுகளை இன்பமாகத் தூண்டி நம் கவலைகளை மறக்கச் செய்யும் பண்டிகைகள் இல்லாவிட்டால் நம் வாழ்க்கை வெறும் பசுமையற்ற பாலைவனமாகத் தான் தென்படும். நம் காதில் ஒலிக் கிறது.

"கங்கா ஸ்நானம் ஆச்சா !
கவலையெல்லாம் போச்சா"

## திருப்பதியில் தங்குவசதி விவரங்கள்

| | அறைகளின் எண்ணிக்கை | வாடகை | நாள் ஒன்றுக்கு |
|---|---|---|---|
| I ஸ்ரீநிவாசா சத்திரம் (முதல் சத்திரம்) பேருந்து நிலையத்திற்கு அருகில். | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டுபடுக்கை வசதிகளைக் கொண்டது | 30 | ரூ. 12/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் நான்கு படுக்கை வசதிகளைக் கொண்டது. | 18 | ரூ. 15/– | ,, |
| (iii) மேஜை நாற்காலிகள் ஒருபடுக்கை வசதி கொண்டது. | 39 | ரூ. 10/– | ,, |
| II ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி | | | |
| மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது. | 16 அறைதொகுதிகள் | ரூ. 16/– | ,, |
| III ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது. (குளிர்ச்சாதனம் பொருத்தப்பட்டது) | 10 அறைதொகுதிகள் | ரூ. 40/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் ஒரு படுக்கை வசதி கொண்டது (குளிர்சாதனம் பொருத்தப் பட்டது) | 4 அறைதொகுதிகள் | ரூ. 30/– | ,, |

# அன்னை காவிரியின் அருமையும் பெருமையும்

மேற்குத் தொடர்ச்சி மலையில் சுமார் நாலாயிரத்து நானூறு அடி உயரத்தில் உள்ள குடகு மலைப் பகுதியின் மெர்க்காராவில் தோன்றும் காவரியாள் நூற்று எழுபத்து ஐந்து மைல்கள் கடந்து தமிழ் நாட்டிற்குள் நுழைகின்றாள். கர்நாடகத்திலிருந்து தமிழகத்திற்குள் காலெடுத்து வைக்கும் பொன்னியை தருமபுரி மாவட்டம் வரவேற்கின்றது. தமிழகத்தை பொன் விளையும் பூமியாக மாற்றி, "சோழ நாடு சோறுடைத்து" என்ற பெருமைக்குக் காரணமாகத் திகழும் அன்னை காவிரியைத் தமிழகத்திற்கு தருமம் செய்வதால் "தருமபுரி" மாவட்டம் என்ற பெயர் மிகவும் பொருத்தமானதாகும்.

தமிழகத்தில் நுழையும்போது பருவம் அடைந்த மங்கையாகவும், அழகு கொழிப்பவளாகவும், களி நடனம் ஆடி வரும் காவிரியாள் காண்போர் கண்களுக்கெல்லாம் திகட்டாத விருந்தாக காட்சி அளிக்கிறாள். அவளது "களுக்" என்ற சிரிப்பும், 'கலீர்' நடனமும், அங்கே ஒரு பெரும் புகை மண்டலத்தை உண்டாக்கி விடுகின்றது. காவிரியாள் அறுபது அடி உயரத்திலிருந்து குதித்து விளையாடுகிறாள். பஞ்சு மலை, சூறாவளிக் காற்றினால் சிதறியது போலவும், மலைமுகிற் கூட்டம், காவிரியாள் எழுப்பும் புகைக் கூட்டத்தைக் கண்டு ஆவல் கொண்டு மலையிலிருந்து இறங்கி வந்துள்ளதோ என்று காண்போர் வியப்புறும் வண்ணம் புகை மண்டலம் தோன்றுகின்றது. இந்த இடத்தை "ஓஹேனக்கல்" என்பர். "ஓஹே" என்றால் புகை, "னக்கல்" என்றால் பாறை என்று கன்னடத்தில் பொருள்படும். இரண்டையும் இணைத்தால் "புகைப் பாறை" என்றாகும். அதாவது புகை பறக்கும் பாறை என்பதாகும். காவிரியாள் பாறையில் விழுந்து நீர்த்திவலைகளாக உருண்டு செல்கின்றதைக் குறிக்கும் பொருளில் அந்த இடம் "உருநீர்க்கல்" என்று அழைக்கப் பட்டு, பின்னர் நாளடைவில் அப் பெயர் "ஓஹேனக்கல்" என்று திரிபு பெற்றதாகவும் கூறுவர்.

ஓஹேனக்கல் நீர் வீழ்ச்சி தோன்றியது பற்றி ஒரு சுவையான கதை பன்னெடுங் காலமாக வழங்கி வருகின்றது. சோழ அரசன் ஒருவன் காவிரிக் காட்டில வேட்டையாட வந்த பொழுது ஒரு பெரிய நிலப்பிளவு இருப்பதைக் கண்டான். அந்த நிலப் பிளவு பொங்கி வர வேண்டிய காவிரியை விழுங்கிவிட்டதையும், அதனால் காவிரி மேற்கொண்டும் வெளிவர இயலாததாயும் கண்டு மனம் வருந்தினான். ஏழெட்டு ஆண்டுகள் சோழ மன்னனும், அவனது படை வீரர்களும், அரும்பாடு பட்டு அப்பிளவு பள்ளத்தை நிரப்ப முயன்றும் முயற்சி பயனளிக்கவில்லை. அச்சமயத்தில் ஒரு முனிவர் சோழ மன்னனை அணுகி, மஹா விஷ்ணுவின் அவதாரமான வெங்கடாஜலபதியின் சக்கரம் அப்பள்ளத்தில் இறங்கி இருப்பதால், உயர்ந்த குணங்களும், நீதிமானுமான ஒரு அரசன் அதில் தன்னைத் தியாகம் செய்து கொண்டால்தான் அப்பெரிய பிளவு அடைபடும் என்று கூறினார். அம்மன்னன் தமிழகத்திற்கு காவிரி பயன் பெற வேண்டும் என்ற பெரு நோக்குடன் அப்பள்ளத்தில் வீழ்ந்து தன் உயிரைத் தியாகம் செய்ததும் அப் பிளவு நிரம்பப்பெற்று, காவிரி நீர் பொங்கிப் பாய்ந்தது. ஓஹேனக் கல்லில் ஓரிடத்தில் மிகக் குறுகிய இடைவெளிக்குள் காவிரியாள் பாய்ந்தோடுகிறாள். பல நூறு அடிகள் அகலமாக பாய்ந்தோடும் காவிரியாள் முப்பது அடி அகலத்திற்குள் பாய்ந்தோடும் இடத்தை "மேகதாட்டு" அதாவது "ஆடு தாண்டு காவிரி" என்று அழைக்கின்றனர். சில நூறு ஆண்டுகளுக்கு முன்பு ஆடுகள் அந்த இடத்தைத் தாண்டிக் குதித்து அக்கரைக்குச் சென்றன என்பதை குறிக்கவே அப் பெயர் ஏற்பட்டது.

ஓஹேனக்கல்லுக்குப் பத்து மைல்கள் தொலைவில் உள்ள இடத்தில் கட்டப்பட்ட மேட்டூர் அணையினால் காவிரியாளின் ஓட்டத்தையும், துள்ளலையும் தடுத்திருக்கிறார்கள். அங்கு இருந்து இருபத்து ஐந்து மைல் தொலைவில் இருக்கும் முக்கூடல் பவானியில் காவிரியும், பவானியும் கூடுகின்றன. தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் கடலில் ஏற்பட்ட போட்டியில், தேவர்களுக்குக் கிடைத்த அமுதத்தை அசுரர்களுக்குப் பயந்து, இந்த இடத்தில் ஒளித்து வைத்தார்கள். அவர்கள் மறைத்து வைத்த அமுதமும், அமுத நதியாகி இவ்விடத்தில் காவிரியுடன் கலக்கின்றது. காவிரியும், பவானியும், அமுத நதியும் கூடும்

திரு. என். ஆர். ஜெயசந்திரன், B.Com.,
காவேரிபட்டணம்.

இந்த இடம் முக்கூடல் பவானி எனப் பெயரிடப்பட்டு, அங்குக் குளிப்பது மிகவும் புண்ணியமாகக் கருதப்படுகிறது

**முக்கூடல் பவானியில் நடந்த ஓர் உண்மை நிகழ்ச்சி**

பத்தொன்பதாம் நூற்றுண்டில், தற்போதைய சேலம், கோவை, தருமபுரி, பெரியார் மாவட்டம் மற்றும் நீலகிரி மாவட்டங்களுக்குப் பொதுவாக ஒரு ஆங்கிலேய கலெக்டர் இருந்தார். அவ் ஆங்கிலேய கலெக்டர் காவிரியும், பவானியும் சங்கமமாகும் இடத்தில் இருந்த பயண மாளிகையில் தங்கியிருந்தார். ஒரு நாள் இரவில் உறங்கிக் கொண்டிருந்த கலெக்டரை ஒரு சிறுமி வெளியே வரச் சொல்லி அழைத்தாள். முதலில் அவர் அதைப்பொருட்படுத்தவில்லை. வெளியே மழை தூறிக் கொண்டிருந்தது. சூறைக் காற்றும் வீசிக் கொண்டிருந்தது. மீண்டும் சிறுமியின் குரல் வெளியே கேட்டது. தூக்கம் கலைந்த கலெக்டர் கதவைத் திறந்து வெளியே பார்த்தபோது சிறுமியைக் கண்டார். சிறுமி நடக்க ஆரம்பித்தாள். அவளைப் பின் தொடர்ந்த சற்று நேரத்திற் கெல்லாம் அவளைக் காணவில்லை. திகைத்து நின்று விட்டார். அவர் ஆச்சரியத்தில் மூழ்கி இருக்கும் வேளையில் அவர் தங்கியிருந்த மாளிகை இடிந்து விழுந்தது. அவருக்கு பெரிய அதிர்ச்சி! பொழுது விடிந்ததும் மக்கள் கூட ஆரம்பித்து விவரம் அறிந்தனர். அம்மன் கோவிலில் பூசை வழிபாடு நடந்து கொண்டிருந்தது. பூசையை கலெக்டர் சற்றுத் தொலைவிலிருந்து கவனித்துக் கொண்டிருந்தார். மூலஸ்தானத்தில் வேதநாயகி அம்மன் அலங்காரத்துடன் வீற்றிருக்கும் காட்சியைக் கண்டார், தம்மை முந்தைய இரவில் வெளியில் வரச் சொல்லி அழைத்த சிறுமியின் உருவ அமைப்பும், அம்மனின் உருவ அமைப்பும் ஒரே மாதிரியாக இருப்பதை அவர் உணர்ந்தார். தம்முடைய உயிரைக் காக்க அம்மன் சிறுமியாகக் கோலம் பூண்டு வந்ததை எண்ணி மனமுருகினுர். அச் சிறுமி கோலத்தில் அம்மன் தன்னை அழைக்காமல் இருந்திருந்தால் தாம் மாண்டிருக்க நேரிட்டிருக்கும் என்பதை உணர்ந்து அம்மனின் அருளை எண்ணி வணங்கினுர். தம் உயிரைக் காத்த அம்மனுக்கு காணிக்கையாக விலையுயர்ந்த தந்தத்தினுல் ஆன சிறு தொட்டிலை செய்து வழங்கினுர். அந்தத் தொட்டிலில் தம்முடைய பெயரையும் பொறித்துள்ளார். அவர் தந்த தந்தத் தொட்டில் இன்றும் அம்மனின் பள்ளியறையில் உள்ளது. (வேதநாயகி அம்பாளுக்கு தந்தப்பல்லக்குச் செய்து காணிக்கையாக வழங்கிய ஆங்கிலேய கலெக்டரின் பெயர் வில்லியம் கேரோ என்பதாகும். அவர் அதனை 1804ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 11ம் நாள் வழங்கினுர். அப்பல்லக்கில் அவரது கையெழுத்து உள்ளது.) சாதி மத வேறுபாடு இன்றி அனைவரையும் சமமாக பாவித்து கருணையுடன் அருள் புரியும் அன்னையின் அருள்தான் என்ன?

**காவிரி கிழக்கே சென்ற கதை**

அகத்திய முனிவருக்கு அளிக்க வேண்டிய மரியாதையையும், வணக்கத்தையும் காவிரியாள் அளிக்கத் தவறியதால் காவிரியாள் செருக்கையும், ஆணவத்தையும் அடக்குவதற்காக, அம்மாமுனிவர் காவிரியை தன்னுடைய கமண்டலத்தில் பிடித்து வைத்துக்கொண்டு தென் திசை நோக்கி வந்துகொண்டிருந்தார். பொழுது புலரும் நேரம். அகத்திய முனிவர் காலைக்கடன்களை முடிக்க எண்ணினுர். கமண்டலத்தை கீழே வைக்க விரும்பாமல், கீழே வைத்தால் காவிரியாள் கமண்டலத்திலிருந்து வெளியே வந்து விடுவாள் என்று கருதி, கையில் வைத்துக் கொண்டிருந்தார்.

(36-ம் பக்கம் பார்க்க)




திரு. டி. ஜி. அனந்தசுப்ரமண்யம்,
*திருப்பதி.*

''ஸாரிவெடலின ஈ காவேரினி ஜூடரே
வாருவீரனுசு ஜூடக தானங்
வாரிகா பீஷ்டமுல நொஸங்குசு
துரமுன நொகதாவுன கர்ஜன பி-
கரமொக தாவுனநிண்டு கருணதோ
நிரதமுக நொகதாவுன நடுசு
வரகாவேரி கன்யகாமணி.
வேடுககா கோகிலலு ம்ரோயகனு
வேடுசு ரங்கேசுனி ஜூசி மரீ
ரேடு ஜகமுலகு ஜீவன மைன
மூடு ரெண்டு நதி நாதுனி ஜூட
ராஜ ராஜேச்வரியனி பொகடுசு
ஜூசி ஸுமமுல தாரமர கணமுலு
பூஜ லிருகடல ஸேயக த்யாக
ராஜ ஸந்நுதுராலை முத்துக.''

என்று ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் காவேரியின் பெருமையை வர்ணிக்கிறார். அது பின்வருமாறு: ''கரை புரண்டு வரும் இந்தக் காவேரி நதியைத் தரிசியுங்கள். மனிதர்களிடையே காணும் தாரதம்மியங்களைப் பாராமல் போகுமிடந்தோறும் அனைவருக்கும் நல்வாழ்வை வழங்கி, ஒவ்வோரிடத்திலும் வேகமாகவும், பிறிதோரிடம் அலைகளும், சுழலும் மிகுந்து பயங்கரமான ஓசையுடனும் விளங்கி ஸ்ரீரங்கனுதனைத் தரிசிப்பது போல் ஸ்ரீரங்கத்தின் வழியே பெருக்கெடுத்துப் பதினான்கு உலகங்களையும் உய்விப்பவனான ப்ரணதார்த்தி ஹரன் விளங்கும் பஞ்சநத க்ஷேத்திரத்தின் வழியாகப்பாய்ந்தும் அம்மூர்த்தியைத் தரிசித்தும் மக்களும், தேவர்களும் இருகரைகளிலும் கூடி ராஜராஜேச்வரியென்று துதித்து மலர்கொண்டு பூஜித்துக் கொண்டாடும்படி அழகாகச்செல்லும் காவேரி என்ற கன்யகாமணியைத் தரிசனம் செய்யுங்கள்''

மேலும் இந்தக் காவிரிக்கு வேதத்தில் ''मरुद्वृधा'' என்று பெயர். ஏனெனில் காலைக் காலத்தில் கருமுகில்கள் தோன்றி எங்கும் மழையைப் பொழிகிறது. நீர் வளமும் நிலவளமுமாக நாட்டை செழுமைப் படுத்துகிறது. நாட்டின் வளத்திற்கு நதிகளும் காரணமாகின்றன. முகில்கள் மலைச் சாரலில் தோய்ந்து குளிர் காற்றால் உந்தப்பட்டு மழைபெய்யும். அந்நீரே நதிகளாக மாறி ஓடி வந்து நாட்டை வளப்படுத்தும். அம்மாதிரி நதிகள் பல இருந்தாலும் காவிரியின் பெருமை எந்த நதிக்கும் கிடையாதெனலாம். ''மருத்வ்ருதா'' என்றால் காற்றினால் விருத்தியடைவது என்று பொருளாகும். பல புண்யநதிகளில் காவிரியும் ஒன்று.

இக்காவிரி எங்கு உண்டானாலும், எங்கு பரவி ஓடி வந்தாலும், தஞ்சை மாவட்டத்தில் நுழைந்தவுடன் இதன் புகழ் இன்னும் பல படிகள் ஓங்க ஆரம்பித்து விடுகிறது. இக் காவிரி குடகு நாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி மைசூர், சேலம், கோயம்புத்தூர், திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்களின் வழியாக ஏறக்குறைய 480 மைல் தொலைவு ஓடி வங்காளக்குடாக் கடலில் கலக்கிறது. இதனுடைய வடிகால் நிலபரப்பு 20—ஆண்டுகளுக்கு முன் 28,000 ஆயிரம் சதுர மைல் என்று தெரிய வருகிறது. இந்நதி திருச்சிராப்பள்ளிக்கு மேற்கில் சுமார் ஒன்பது மைல் தூரத்தில் இரு நதிகளாகப் பிரிகிறது. வடக்குப் பக்கத்தியது கொள்ளிடமென்றும், தெற்குப் பக்கத்தியது பழைய காவிரி நதி என்ற பெயருடனேயே ஓடுகிறது மேற்கூறிய இடத்திலிருந்து 17மைல்கள் ஓடின பிறகு இரு நதிகளும் மிக பக்கமாக நெருங்கி ஓடி வந்து பிறகு கொள்ளிடம் வடகிழக்காகச் செல்ல, காவிரி தெற்கு நோக்கித் திரும்பி

ஓடுகிறது காவிரி அல்லது காவேரி. இதன் உற்பத்திக்குக் காரணமாகக் பல கதைகள் கூறுவர். இம்மாவட்டத்தைச் சேர்ந்த கதை ஒன்று காணப்படுகிறது.

அதாவது சீர்காழியில் சூரபத்மனுக்கு அஞ்சி ஈச்வரனை நோக்கித் தவம் புரிந்த இந்திரன் தன் நந்தவனம் மழையின்றிக் காய்ந்த காலத்தில் விநாயகரைப் பிரார்த்தித்துக் காவிரியை அடைந்தானென்ற கதை சோழ மண்டல சதகத்தில் காணப்படுகிறது.

''பொன் பூத்த மலர்க் கொன்றைமுடிப்
பொழி மும்மதத்துப் பொலிமருப்பு
மின் பூத்த கராசல முகத்து மேலோன்
சோழ விநாயகனே
தென் பூத்தருள் காவிரி பெருகச்
செய்து
நாளுஞ் செழிப்பேற
வன் பூத்தழைந்து வளர்வதென்றே
வனஞ்சேர் சோழமண்டலமே''

என்றும்,

'' பாடல் சால் சிறப்பில் பரதத் தோங்கிய
கோடாச் செங்கோல் சோழர்
தங்குலக்கொடி''

என்று மணி, மணிகளான சொற்களைக் கொண்டு கோத்த ''மணிமேகலை'' என்ற நூலில் சீத்தலைச் சாத்தனுர் என்னும் பழம் பெரும் புலவர் கூறுகிறுர். முற்றிலும் உண்மை தானே.

சோழர்கள் ஆண்ட காலத்தில் பசியும், வறுமையும் இருந்த இடம் தெரியாமலிருந்தது. சோழர்களின் புகழைத் தெரியப்படுத்தும் கொடியாகவே காவிரி அந்நாட்டின் எல்லா பகுதிகளிலும் ஓடிச்சென்றுள். காவிரி தான் சுரக்கும் வளத்தைப் பொய்ப்பிக்க மாட்டாள். இக்கருத்தைச் சாத்தனுர் வெகு அழகாகக் கூறுகிறுர்:

''தோன்றிநிலை திரிந்து கோடை நீடினும்
தான் நிலை திரியாத் தண்டமிழ்ப்
பாவை''

என்று நாட்டை வளப்படுத்தி மக்களுக்கு உணவையும் அளித்து வருகிறுள். காவிரி தன் கடமையில் கருத்தாகவே உள்ளவள் என்பதைச் சிலப்பதிகார ஆசிரியர்,

'' கரியவன் புகையினும் புகைக்கொடி
தோன்றினும், விரிகதிர் வெள்ளி
தென்புலம்
படரினும் கால் பொருநிவப்பிற்
கடுங்குர
லேற்றெடும் ஆல் முதிர்கொண்மூப்
பெயல்
வளம் சுரப்பக் குடமலைப் பிறந்த
கொழும்
பல்லுரமொடு கடல் வளனெதிரக்
கயவாய்
நெரிக்குங் காவிரி''

என்று கூறி மகிழ்ச்சியடைகிறுர்.

காவிரியில் நீராடினுலோ, அல்லது கரையில் சிறிது காலம் தங்கினுலோ நம் மனத்தில் இருக்கும் களைப்பு நீங்கும்.

कावेरीसलिलावगाहरसिकः
कस्येष नेद्यो मरुत् ।
क्लान्तानां पुनरघ्वनीनवपुषां
यन्निर्धुनीते श्रमम् ॥

என்று ஒரு கவி வர்ணிக்கிறுர்.

காவிரியின் சிறப்பைக் கூறுமிடத்து கவியரசர் மகாகவி சுப்ரமண்யபாரதி கூறுகிறுர்,

'' காவிரி தென் பெண்ணை பாலாறு ''

என்றும்

'' கனியும் கிழங்கும் தானியங்களும்
கணக்கின்றித் தருநாடு,
இனிய பொழில்கள் நெடிய வயல்கள்
எண்ணரும் பெருநாடு''

என்றும் கூறியுள்ளார். காவிரியின் தண்ணீரைப் பருகி அளவில்லா தானியங்களைக் கொடுத்து, மக்களின் பசிப்பிணியையும், வறுமையையும் போக்கி விடுகிறது. ஆகையால் தான் சோழநாட்டிற்கு ''சோறுடைத்த நாடு'' என புகழ் கிடைத்தது. சோழமண்டலத்தில் அவள் தவழாத, பரவாத, ஓடாத இடம் அரிது. சோழ நாட்டார் ஒரு போகமல்ல, இருபோகமல்ல, முப்போகமும்செய்து இன்புற்று வாழக் காரணமானவள் காவிரியேயாகும்.

இளங்கோவடிகள் ''தாங்கா விளையுள் காவிரிநாடு'' என்று கூறுகிறுர். மேலும் அடிகள் காவிரியின் பெருமையைச் சொல்லிச் சொல்லி மாய்கிறுர்.

'' உழவர் ஓதை மதகு ஓதை
உடைநீர் ஓதை தண் பதங்கொள்
விழவர் ஓதை சிறந்தார்ப்ப
நடந்தாய் வாழி காவேரி
வாழி அவன் தன் வளநாடு மக
வாய் வளர்க்கும் தாயாகி
ஊழி உய்க்கும் பேருதவி ஒழியாய்
வாழி காவேரி''

என்று. காவேரியை இறை ஒரு பாகத்து உறையும் அம்பிகையோடு ஒப்பிட்டு ஒரு கற்பனை செய்கின்றுர், சேக்கிழார். இறைவி உயர் மலையினுல் பெறப்பெற்றவள். காவிரியும் மலையினுல் பெறப் பெற்றவளே. இறைவி பல அறங்களையும் வளர்க்கின்றுள். திருவையாற்றில் அறம் வளர்த்த நாயகியாக அமர்ந்து,

'' இச்சைப்படி தன் பேரறம் எண்
ணுங்கும்.

வளர்க்கும் பச்சைக் கொடி''யைப் போல் பொன்னி நங்கையும் தான் சுரக்கும் வளத்தினுல் செல்வம் பெருகச் செய்து எங்கும் அறத்தை வளர்க்கின்றுள் என்பது கருத்து. இது தவிர பெரிய புராண ஆசிரியர் காவிரியைப்பற்றி ஆங்காங்கு கூறிய சொற்றொடர்கள் சிந்திக்கத்தக்கன.

'' பாட்டியல் தமிழுரை பயின்றஎல்லையுள்
கோட்டுயர் பனிவரைக் குன்றின்
உச்சியில்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி''
'' நீடு வண்புகழ்ச் சோழர் நீர் நாட்டிடை
நிலவு மாடு பொன் கொழி காவிரி''

இவைபோல் சேக்கிழார் காவிரியைப் பற்றி ஊக்கத்தோடு உரைக்கும்

காவிரிப் பெருக்குகள் எவ்வளவோ! கவிச்சக்கரவர்த்தி கம்பர் அயோத்தியா காண்டம் குகப்படல ஆரம்பத்தில்,

'' பூவிரி பொலன் கழற்
பொருவிருனேயான்
காவிரி நாடென்ன கழனி நாடொரீ
இத்தாவர சங்கம மென்றுந்தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை
யெய்தினன் ''

காவிரி நாட்டைக் கோசல தேசத்துக்கு உவமை கூறினர். ஏன்? காலந் தவருது வெள்ளம் பெருகுவதும், வேண்டிய அளவினும் மிக்க நீர் பெருகுவதுமாகிய காவிரிக்கு பெருமை வழங்கத்தான்.

கருணைக்கு எடுத்துக் காட்டாகக் காவிரியைப் பாடுகிருர் வில்லி புத்தூரார்.

'' காவிரி யென்னதப்பா கருணையாள் ''

என்று:

குலசேகரப்பெருமான் அரங்கநாதனைப் பற்றிப் பாடும் பொழுது,

'' இருள் இரியச் சுடர் மணிகள்
இமைக்கும்நெற்றி
இனத்துத்தி அணி பணம்
ஆயிரங்கள் ஆர்ந்த
அரவு அரசப் பெருஞ்சோதி
அனந்தன் என்னும்
அணி விளங்கும் உயர்வெள்ளை
அணையை மேவித்
திருவரங்கப் பெருநகருள்
தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப்
பள்ளிகொள்ளும் ''

என்று.

அரங்கனை வர்ணிக்கும் பொழுது: ஸ்ரீசக்கரவர்த்தித் திருமகனுல் விபீஷணனுக்குக் கொடுக்கப்பட்ட அரங்கன் காவேரிக்கரையிலேயே சயனித்து விடுகிருன்.

'' குடைதிசை முடியை வைத்து
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டி
தென்திசை இலங்கை நோக்கி

காவிரியின் இயற்கையைப் பார்த்தவுடன் அரங்கன் மெய் மறந்து அங்கேயே தங்கிவிட்டான்; அரங்கனை ஆட்கொண்ட காவிரியின் பெருமை தான் என்ன வென்றே!

ஸ்ரீரங்கநாதனைப் பாடியவர்கள் காவிரியையும் பாடியாகவேண்டும். ஏனெனில் காவிரியின் அலைகளில் மயங்கியல்லவா தங்கி விட்டான்

# மாயவரத்தில் காவிரி துலா ஸ்நானம்

திரு. எஸ். வி. வைத்தியநாதன் - சென்னை-28.

காவிரி பாயும் சோழநாட்டுச் சிவத்தலங்கள் 190-ல் காவிரிக்குத் தென்கரையிலுள்ள 127 தலங்களில் 39 வதாக விளங்குவது ''திருமயிலாடு துறை'' என்ற புண்ணிய க்ஷேத்ரம்.

உமையம்மையார் மயில் வடிவு கொண்டு இறைவனை வழிபட்ட திருவூர். அம்பாளின் விருப்பப்படி சுவாமிமயில்உருக்கொண்டுதாண்டவ மாடினர். அதனல் இத்திருவூருக்கு ''திருமயிலாடு துறை'' என்று பெயருண்டாயிற்று. சுவாமிக்கு மாயூர நாதர்என்றும் அம்பாளுக்கு அஞ்சல் நாயகி அல்லது அபயாம்பிகை என்றும்திருநாமங்கள். திருஞான சம்பந்தரும் அப்பர் பெருமானும் இத்தலத்தைப்பற்றிப் பாடியிருக்கிருர்கள்.

மாயூரநாதர் ஆலயம் மிகவும் பெரியது. சுமார் 165 அடி உயரத்தில் மிகப் பெரிய ராஜகோபுரம் இருக்கிறது. கோயிலுக்குள்ளேயே, வடக்குப் பிராகாரத்தில் பிரம்ம தீர்த்தம் உண்டு. இங்கு 'ஆதி மாயூர நாதர்' கோயிலும் காணலாம்.

இத்தலத்தில் முக்கிய உற்சவம் 'காவிரி துலா உற்சவம்'. ஐப்பசி மாதத்தில் காவிரி பாயும் எந்தத் தலங்களிலும் நீராடுவது விசேஷம். ஆனல் இங்கு மாயவரத்தில் இந்தச் சமயத்தில் காவிரி நீராட்டத்தின் சிறப்பு சொல்லி முடியாது. நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பக்தர்கள் கூட்டம் மாயவரத்தில் குமுழும். ஐப்பசி மாதம் முழுவதுமே நீராடுவது விசேஷம். ஆனுலும் ஐப்பசி கடைசி நாள் ''கடைமுகம்'' ஸ்நானமும், கார்த்திகை முதல் நாள் ''முடவன் முழுக்கு'' ஸ்நானமும் செய்யவே பக்தர்கள் காத்திருப்பார்கள். ஐப்பசி கடை முகத்திற்கு வர முடியாமல், மறுநாள் வந்த முடவனுக்கு சுவாமி மோட்சம் அளித்ததாக ஐதீகம். இந்த துலா மாதம் கடைசி 10 நாட்கள்போது கோயிலில் மிகச் சிறந்த முறையில் உற்சவம் நடைபெறும்.

இங்கு காவிரியில் 'துலா ஸ்நானம்' என்று ஒரு துறை இருக்கிறது. அதற்கு எதிரே காவிரியின் நடுவே 'நந்தி மண்டபம்' ஒன்று காணலாம். இதற்கு 'ரிஷப தீர்த்தம்' என்று பெயர். ஐப்பசி அமாவாசையன்று, காவிரி 'கங்கை' ஆகிறது என்று ஐதீகம். துலா உற்சவத்தின்போது பக்தர்கள் இந்தத் துறையில் தான் 'கடைமுக ஸ்நானம்' செய்வார்கள். மாயூர நாதர் கோயிலிலிருந்தும், மற்றும் அருகாமையிலுள்ள இதர கோயில்களிலிருந்தும், சுவாமியும் அம்பாளும் இந்தத் துறைக்கு எழுந்தருளி பக்தர்களுக்கு தீர்த்தம் வழங்குவார்கள்.



அரங்கன். இதை 15-வது நூற்றாண்டில் ஆந்திர பிரதேசத்தில் வாழ்ந்த ஸ்ரீ அன்னமாசாரியர் பாடுகிறார்.

ब्रह्मपूजिञ्चे रघुपति विभीषणुकिच्चे
ब्रह्मण्यूडी रङ्गपति गोलुवरे ।।
कावेरीमध्यरङ्गक्षेत्रमल्लांदगो ।
श्रीविमानमादिगो शेषपर्यङ्कमीदे ।।

VOL. II 88-Page

तेल्लियनु मर्राकु तोट्टलने यूगेगान ।
चेल्लुबडिनगीनि श्रीरङ्गशिशुवु ।।
कलिकि कावेरितरङ्गाल बाहुललने ।
तलगकिट्टु रङ्गमध्यपु तोट्टलन् ।।
पलुमाह वननूचि पाडगानूगीनि ।
चिलुपालु सेलवितो श्रीरङ्गशिशुवु ।।

VOL. XI 161-Page

மேலே கூறிய இரண்டு கிருதிகளிலும் காவிரியைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். ஸ்ரீரங்கனுதனுக்குப் பெருமை காவிரியின் அலைகளில் அலைமகளோடு சயனித்திருப்பதுதான்.

இந்த அரங்கனை ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள்,

'' காவேரீ தீரமுநநு பாவநமகு
ரங்கபுரிநி ஸ்ரீவெலயு''
ராஜு வெடல ஜூதாமு ராரே!

என்ற தோடி ராக கிருதியில் பாடியுள்ளார். காவேரியின் பெருமையைக் கூறும்பொழுது ஸ்ரீ ஸ்வாமிகள்,

'' கோடி நதுலு'' என்ற தோடி கீர்த்தனத்தில்,

'' கங்க நூபுரம்புநந்து ஜனிஞ்செநு
ரங்கனி காவேரிகனி ராஜெல்லனு''

''இறைவனின் பாதங்களிலிருந்து ப்ரவஹித்த கங்கையே காவிரியாக உருவெடுத்து ஸ்ரீ ரங்கநாதனைக் கண்டு மகிழ்ந்ததன்றோ'' என்று.

கலிங்கத்துப் பரணியிலும்,

'' காலால் தண்டலை உழக்கும் காவிரி''

என்று கூறுகிறார் ஜயங்கொண்டார்.

காவிரியின் வற்றா வளத்தை பட்டினப் பாலையில் பார்ப்போம்:

'' வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
திசை திரிந்து தெற்கு ஏகினும்
தற்பாடிய தளி உணவில்
புள் தேம்பப் புயல் மாறி
வான் பொய்ப்பினும் தான் பொய்
யாமலைத்தலைஇயகடற்காவிரி'' என்று.

புறநானூறு பாடல் ஒன்று காவிரியின் கடமையைப் போற்றிப் புகழ்வதைப் பாருங்கள்.

(32-ம் பக்கம் பார்க்க)

# காவிரிக் கரையில்.....

தமிழ்நாட்டின் வளமைக்கு உதவும் ஆறுகளுள் காவிரி தலை சிறந்து விளங்குகிறது. அகத்தியரின் கமண்டலத்திலிருந்து விநாயகப் பெருமானால் வெளிக்கொணரப் பெற்ற அவ்வாற்றின் கரையில் எண்ணற்ற சிவத்தலங்களும் வைணவ திவ்விய தேசங்களும் அமைந்துள்ளன. அத்தலங்களையும் அவற்றிற்கு வளமை அளிக்கும் காவிரியையும் ஆழ்வார்களும் நாயன்மார்களும் சிறப்பித்துப் பாடியுள்ளனர். இவ்வாற்றின் பெற்றியைத் தொண்டரடிப் பொடி ஆழ்வார்,

'' கங்கையிற் புனிதமாய
காவிரி நடுவு பாட்டுப்
பொங்குநீர் பரந்துபாயும்
பூம்பொழி லரங்கத் தன்னுள்''

என மங்களசாசனம் செய்துள்ளார். இவ்வாற்றினிடையே அமைந்துள்ள மூன்று அரங்கங்களைக் காண்போம்.

# ...மூன்று அரங்கங்கள்

## ஆதியரங்கம்

காவிரியின் பாதையிலுள்ள ஸ்ரீரங்கப்பட்டினம் எனும் தலம் ஆதியரங்கமாக விளங்குகிறது. பஸ்சிமரங்க க்ஷேத்திரம் எனப்படும் இத்தலத்தின் மேற்கில் பஸ்சிம வாகினியும் கிழக்கில் பூர்வநதியும் வலம் வருகின்றன. வட மேற்குத் திசையில் இரண்டாகப் பிரியும் காவிரி தென் மேற்கில் மூன்று கற்களுக்கு அப்பால் ஒன்று சேர்கிறது.

வெள்ளையருக்குச் சிம்ம சொப்பனமாக விளங்கிய திப்பு சுல்தானின் தலைநகராக இத்தலம் விளங்கியது. அரிமாவை நிகர்த்த சும்மாவீரனின் கோட்டை அரண்மனை கல்லறை ஆகியன இன்றும் தொல்பொருள் ஆராய்ச்சி நிறுவனத்தின் கண்காணிப்பில் உள்ளன. கோட்டைக்கு அருகில் பள்ளி கொண்ட பெருமாளின் ஆலயம் பாண்டியரின் சிறப்பப் பாணியில் உள்ளது. ஆயிரம் நாவை உடைய அனந்தனின் மேல் பள்ளி கொண்ட கோலத்தில் திருமால் காட்சியளிக்கிறார்.

காவிரியின் வேண்டுகோளுக்கு இணங்கி திருமால் இத்தலத்தில் பள்ளி கொண்டதாகத் தல வரலாறு இயம்புகிறது. இதனை மெய்ப்பிக்கும் வகையில் காவிரியே தேவி வடிவத்தில் பெருமாளின் திருவடியருகில் எழுந்தருளியுள்ளார். அரங்கனைக் குறித்துத் தவம் இருந்து அவர் அருள் பெற்ற கௌதம முனிவரின் உருவமும் ஆலயத்தில் உள்ளது.

இவ்வாலயத்தில் ஆண்டு தோறும் நடைபெறும் திருவிழாக்களுக்கு மக்கள் திரளாக வந்து திருமாலின் அருள் பெற்றுத் திரும்புகின்றனர். தை, மாசி மாதங்களில் நடைபெறும் இரத சப்தமி, சங்கராந்தி, பிரம்மோத்சவம் ஆகிய திருவிழாக்கள் பெருஞ்சிறப்பாகக் கொண்டாடப் படுகின்றன: சித்திரை, வைகாசி மாதங்களில் நடைபெறும் அரங்க ஜெயந்தி, அரங்கமுடி உற்சவம், ஆனி, ஆடி மாதங்களில் நடைபெறும் ஏகாதசி ஊஞ்சல் உற்சவம் ஆகிய விழாக்களுக்கும் மக்கள் பெருவாரியாகக் கலந்து கொள்ளுகின்றனர்.

## மத்திய அரங்கம்

கண்ணுக்கு குளிர்ச்சியும் மனதுக்கு இனிமையும் அளிக்க வல்ல இயற்கைக் காட்சிகளைத் தன்னுள் அடக்கிக் கொண்ட சிவ சமுத்திரம் என்னும் தலம் மத்திய அரங்கமாகும். காவிரி தீவைச் சுற்றி இரு பிரிவுகளாகப் பிரிந்து வளைந்து வந்து 'பார்சுக்கி' 'கனக சுக்கி' என இரு பெரு நீர் வீழ்ச்சிகளாக 200 அடி ஆழம் பாய்ந்து மீண்டும் ஒன்று கூடுகிறது.

மூன்று கல் நீளமும் மூன்று கல் அகலமும் உடைய இத் தீவில் ஜகன் மோகன அரங்கநாதர் சயனித்துள்ளார். இவ்வாலயம் இராஜகோபுரம் இன்றி மொட்டையாகக் காட்சி அளிக்கிறது. இங்கு காவிரியம்மனின் திருவுருவம் உள்ளது. இத்தலத்தில் தட்சகன் என்னும் சர்ப்பராஜன் திருமாலை வழிபட்டு முக்தி பெற்றதாகத் தல வரலாறு செப்புகிறது. இவ்வுண்மைக்குச் சான்று பகரும் வண்ணம் மேற்பகுதியில் மனித உருவம் கீழ்ப்பகுதியில் அரவ உருவமும் உடைய தட்சகனின் திருவுருவம் ஆலயத்தில் உள்ளது.

திருமால் பள்ளி கொண்டுள்ள இத்தலத்தில் சோமேஸ்வர சிவாலயமும் உண்டு. இவ்வாலயத்தில் நான்கு கரமுடைய மீனாட்சி அம்மன் அருள் பாலிக்கிறார். இரு கரங்கள் சங்கு சக்கரத்தை ஏந்திய வண்ணம் உள்ளன. மற்ற இரு கரங்கள் அபய ஹஸ்த பாணியில் அமைந்துள்ளன.

## தென்னரங்கம்

தென்னரங்கம் எனப்படும் திருவரங்கத்தை அறியாதவர் எவரும் இருக்கமாட்டார் என்பதை உணர்த்தும் வகையில் கம்பர்,

'' பணியரங்கம் பெரும்பாயற்
பரஞ்சுடரை யாங்காண
அணியரங்கம் தந்தானை
அறியாதார் அறியாதார்''

எனக் கூறுகிறார்.

திரு. எம். ராஜகோபாலன்,
திருவான்மியூர்.

சோலையழகும் செழுமையும் ஒருங்கே பெற்ற இத்தலம் பூலோக வைகுந்தம், அரங்கராஜாவின் இராஜ தானி நகரம் போன்ற சிறப்புப் பெயர்களை உடையது. காவிரி கொள்ளிடம் ஆகிய நதிகளுக்கு இடையில் அமைந்துள்ளது. கோயில் என்றால் இறைவன் குடி கொண்ட இடம் என்ற பொருள். எல்லா கோயிலும் இறைவன் குடி கொண்ட இடமாயினும், சிறப்பாகச் சைவர்கட்கு சிதம்பரமும் வைணவர்க்குத் திருவரங்கமும் கோயிலாக விளங்குகிறது.

இவ்வாலயத்தின் தொன்மையை கோயிலொழுகு என்னும் நூல் மூலம் அறியலாம். ஆதியிலிருந்து 16-ம் நூற்றாண்டு வரை இவ்வாலயத்தின் வரலாற்றை இந்நூல் தெரிவிக்கிறது.

பிரமனின் ஆராதனை மூர்த்தியான அரங்கனை இக்ஷுவாகு மன்னர்கள் பூசித்து வந்தனர். பட்டாபிஷேகத்தின் போது இம்மூர்த்தியை இராமனிடம் பரிசாகப் பெற்ற விபீஷணன் இத்தலத்தில் தரையில் வைக்க, அதனை அவனால் மறுபடியும் எடுக்க முடியவில்லை. பிற்காலத்தில் சோழ மன்னர்கள் நந்திவர்மன், கிள்ளி ஆகியோர் புதையுண்ட ரங்க விமானத்தையும் அரங்கனின் திருவுருவத்தையும் வெளிக் கொணர்ந்து ஆலயத்தைப் புதுப்பித்தனர். பின்னர் வந்த சோழ மன்னர்களால் 6 பிரதக்ஷணங்களும் 7 மதில்களும் கட்டுவிக்கப்பட்டன. ஆலிநாடான திருமங்கை மன்னனால் கட்டப் பட்ட பெரியமதில் இன்னும் அம்மன்னனின் பெயருக்குச் சான்று பகர்கின்றது. பொருள் இன்மையால் தன் காதலி குமுத வல்லியின் விருப்பம் பேரில் வழிப்பறி செய்து வந்த ஆலி நாடனுக்குத் திருமாலும் ரங்கநாயகியும் திவ்விய உபதேசம் செய்வித்தனர். அன்று முதல் ஆலிநாடன் திருமங்கையாழ்வாரானார்.

இவ்வாலயத்திற்கு 21 கோபுரங்கள் அணி செய்கின்றன. பொன் வேயப்பட்ட ரங்க விமானம் உடைய கருவறையில் 15 அடி நீளமுடைய ஆதிசேடன்மீது அரங்கநாதர் சயனித்துள்ளார். ஒரு கரம் தலையைத் தாங்க மற்றொரு கரம் திருவடிவரை நீண்டுள்ளது. மார்பில் முத்தாரம் வனமாலை கௌஸ்துபம் துலங்கவும் தலையைக் கிரீடம் அணி செய்யத் தைலக் காப்பில் மூழ்கிய வண்ணம் அரங்கநாதர் பள்ளி கொண்டுள்ளார். குலசேகர ஆழ்வார் பெருமாளின் கோலத்தை,

'' குடதிசை முடியை வைத்துக்
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை இலங்கை நோக்கிக்
கடல் நிறக் கடவுள் எந்தை
அரவணைத் துயிலுமா கண்டு
உடல் எனக்கு உருகுமாலோ
என் செய்கேன் உலகத்திரே''

என மங்களாசாசனம் செய்துள்ளார். உற்சவரான அழகிய மணவாளர் இரு அணங்குகளுடன் தங்க மஞ்சத்தில் காட்சியளிக்கிறார். தனியாகக் கொலுவீற்றிருக்கும் அரங்கநாதரின் ஐந்துமனைவியரும் தனித்தனி கோயில்களில் குடி கொண்டுள்ளனர். அவர்கள், பட்டத்து ராணி ரங்கநாயகி, உறையூர்ச் சோழன் மகள் கமலவள்ளி, சேரன் குலசேகரன் மகள் சேரகுலவல்லி, பெரியாழ்வார் மகள் சூடிக் கொடுத்த நாச்சியார், டில்லி பாதுஷா மகள் துலுக்க நாச்சியார் ஆகியோர். வேணு கோபாலர் சந்நதியிலுள்ள கோபியரின் உருவங்கள் நல்ல கலையழகு வாய்ந்தவை. இவ்வாலயத்திற்கு இராமனுஜரும் மணவாளமுனிகளும் பலத்தொண்டுகளைப் புரிந்து உள்ளனர். பிற்கால பாண்டியர், விஜயநகர மற்றும் நாயக்க மன்னர்கள் பல வகையில் திருப்பணிகளைச் செய்துள்ளனர்.

மதுர கவியாழ்வார் தவிர ஏனைய பதினொரு ஆழ்வார்களும் அரங்கநாதனைச் மங்களாசானம் செய்துள்ளனர். கம்பரின் இராமகாதை இவ்வாலயத்திலுள்ள மேட்டு அளசிங்கர் சந்நதியில் அரங்கேற்றப்பட்டது. பிற்கால ஆசாரியார்களுள் திவ்விய கவி பிள்ளைப் பெருமாள் திருவரங்கத்து மாலை கலம்பகம், அந்தாதி போன்ற சிற்றிலக்கியங்களைப் புனைந்துள்ளார்.

தொண்டரடிப் பொடியாழ்வார் அரங்கநாதனுக்குத் திருப்பள்ளி எழுச்சி பாடியுள்ளார். அரங்கநாதனை வராக மூர்த்தியாகவும் கிருஷ்ணனாகவும், வாமனனாகவும் திருமங்கையாழ்வார் காண்கிறார். தன் இறுதி நாட்களை இங்குக் கழித்த பெரியாழ்வாரின் பாடல்களில் வீடுபேறு பற்றிய கருத்துக்கள் மிளிர்கின்றன. அரங்கனைக் காதலனாகப் பாவித்த ஆண்டாள் அவரை வாயழகர், கண்ணழகர், கொப்பூழில் எழுகமலப் பூ அழகர் எனப்பாடுகிறார். தாழ் குலத்துப் பிறந்து இறைவனால் காட்சி கொள்ளப்பட்ட திருப்பாணாழ்வார் கண்ணனின் ஆயர்பாடி லீலைகளை இங்குக் காண்கிறார்.

இத்தலத்தில் ஆண்டுதோறும் உத்திரத் தேர், சித்திரைத் தேர், வைகுண்ட ஏகாதசி போன்ற விழாக்கள் விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றன.



## ஓர் அறிவிப்பு

*இவ் இதழ் காவிரிச் சிறப்பிதழாக வெளிவருவதால், இம்மாதப் பத்திரிகையில் தொடர் கட்டுரைகள் கொண்டு விளங்கா. அவை தொடர்ந்து அடுத்த இதழ் முதற்கொண்டு வெளிவரும்.*

*ஸப்தகிரியில் வெளியிடப்படும் கதை, கட்டுரைகள், கவிதைகள் ஆகிய வற்றில் காணப்படும் கருத்துக்கள் அவ்வவ் எழுத்தாளர் பெருமக்களின் தனிப்பட்ட கருத்துக்களேயாம். அவற்றிற்கு 'ஸப்தகிரி' எவ்வகையிலும் பொறுப்பேற்காது.*

—ஆர்.

# சீர்மல்கும் காவிரி

காலத்தைக் கடந்து நிற்கும் கவின் மிகு கவிபாடும் புலவர் பெருமக்கள் காவிரியைக் காணும் கண்ணோட்டம் வேறு: சூலப்படையானையே பாடும் சிலமுடை அடியார்கள் காவிரியைக் காணும் கண்ணோட்டம் வேறு. பூவர் சோலை மயில் ஆல, புரிந்து குயில்கள் இசைபாட, காமர் மாலை அருகு அசைய நடந்து வரும் காவிரியைக் கடவுளாகவே கண்டனர் கண் மூன்று டையானின் அடியார்கள்.

மருங்கு வண்டு சிறந்து ஆர்ப்ப, மணிப்பூ ஆடை - அது போர்த்து, கருங்கயல் - கண்விழித்து, ஒல்கி, நடந்து வரும் காவிரித்தாய் பிறந்த வரலாறு விநாயகர் புராணத்தில் உள்ளவாறு காண்போம்.

முனிவர்களுள் முதல்வராகிய அகத்திய முனிவர் சிவபெருமானிடம் இருந்த காவிரி நதியைக் கமண்டலத்தில் அடச்கிக் கொண்டு தென் திசை நோக்கி வருவாராய், குடகுமலையில் சிவபூஜை செய்து கொண்டிருந்தார். அப்பொழுது இந்திரன் சீர்காழிப்பதியில் சிவபெருமானைப் பூசித்து வந்தான். பூசைக்கு உதவும் பொருட்டு திருநந்தவனமும் வைத்திருந்தான். சூரபத்மனின் கட்டளைக் குப்பணிந்து மேகங்கள் மழை பெய்யாது இருந்தன. நந்தவனத்திலுள்ள செடிகட்குத் தண்ணீர் கிடைக்காமல் அவை வாடத் தொடங்கின. அந்தச் சமயத்தில் அங்கு வந்த நாரதர் இந்திரனைப் பார்த்து, "அகத்தியருடைய கமண்டத்தில் உள்ள காவிரி பெருகுமானல் உன்பூங்கா பொலிவு பெறும். அவ்வாறு செய்யக் கூடியவர் முழுமுதற் கடவுளாகிய விநாயகப் பெருமானே ஆவார்'' எனக் கூறினர்.

இந்திரன் விநாயகரை வழிபட்டு வேண்டிக் கொண்டான். அவன் விருப்பத்தை நிறை வேற்றி வைக்க விநாயகர் காகம் உருக்கொண்டு பொதிய மலைச்சாரலுக்குப் பறந்து சென்றார். அங்கே அகத்திய முனிவர் காவிரி அடங்கியுள்ள கமண்டலத்தைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு நித்திய கர்மானுஷ்டானங்களைக் கவனித்துக் கொண்டிருந்தார். காகத்தின் உருவில் வந்த விநாயகரும் பறந்து வந்து கமண்டத்தின் மீது போய் அமர்ந்தார். புனித நீரைக் காகம் அசுத்தப்படுத்தி விடுமோ என அகத்தியர் கைகளை ஓங்கி காகத்தை விரட்டினர். காகமும் பறப்பது போல முயன்று கால்களால் கமண்டத்தைக் கவிழ்த்தது. அந்தக் கணமே அதனுள் அடங்கியிருந்த காவிரி பூவுலகிலே ஓடத் தொடங்கியது.

இவ்வாறு கைலாச நாதனுல் குறு முனிக்கு அளிக்கப்பட்டு, விநாயகப் பெருமானுல் கீழே கொண்டு வரப் பட்டதுதான் காவிரியாகும். இக் காவேரியை அருணகிரிநாதர், "ஏழ் தலம் புகழ் காவேரி'' என்று பழநித் திருப்புகழில் பாடுகிறர். எழு தீவினர்களாலும் புகழப்படுவது காவிரி என்பது இதன் பொருளாகும்.

இக்கவின்மிகு காவிரியை சிவனருட்செல்வர்கள் எவ்வாறு கண்டு போற்றினர் என்பதற்கு "திருவாஞ்சியப் புராணம்'' நமக்குச் சான்று புகல்கின்றது. பாடல்:-

கங்கையங் கரைநாள் மூன்றும்
கௌதமை யமுனை யாடி
அங்கதன் கரைநாள் ஐந்தும்
அமைந்துளார்க்கெய்தும் பேற்றில்
பொங்குகா விரிம ருங்கில் போயொரு
கணப்போ தேனும்
தங்குவார்க் குரிய பேறே
தலைமையாய்ச் சாற்றும் நூல்கள்.

என்று கூடிய பதிகள் மற்றளவில
வெய்தித்
துன்று காவிரி மருங்கெலாம்
துறக்கமே நிகர்க்கும்
மன்றல் சேரதன் கரையின் நுண்
மணலெலா மிலிங்கம்
நின்ற கோவின் குளப்படி
நீரெலாம் தீர்த்தம்.

இந்த இரண்டு பாக்கள் நுவலும் செய்திகளை வேறு எங்கே காணமுடியும்! கங்கை, கௌதமை, யமுனை முதலிய நதிகளில் பல நாட்கள் புனித நீராடி, அங்கே உள்ள பதிகளைப் பல நாட்கள் வணங்குவதால் கிடைக்கும் பேற்றைவிட, பொங்கு காவிரி மருங்கில் ஒரு கணப்பொழுது தங்கினுல் கிடைக்கும் பேறு மிகமிக அதிகமாகும் என்கிறது திருவாஞ்சியப் புராண முதல்பாடல். இதற்குக் காரணம் என்ன? என்பதை இரண்டாவது பாடல் கூறுகிறது. காவிரியின் வடகரை தென்கரைகளில் உள்ள பதிகள் (தலங்கள்) யாவும் "துறக்கமே'' (சொர்க்கமே) ஆகும். காவிரிக்கரையின் நுண்மணல் எல்லாம் இலிங்கங்களே ஆகும். அக்கரையில் உள்ள பசுவின் குளப்படி நீரெலாம் பாபங்களைப் போக்கும் தீர்த்தமாகும். எனவே காவிரியின் அருகில் சென்றுலே வீடு பேறு கிடைப்பது திண்ணமாகும்.

திரு. ஆ. பக்தவச்சலம்,
M.A., B.Sc, B.Ed, D.H.E.
குடியேற்றம்

"சோழநாடு சோறுடைத்து'' என்ற பழமொழி ஒன்றுண்டு. இதன் உட்பொருள்—சோழ நாடு புண்ணியம் உடையது என்பதே ஆகும். 'சோறு' எனும் சொல் "புண்ணியம்'' எனும் பொருள் படும். சான்ருக திருவாசகத்தில் "பாதகமே சோறு பற்றினவா தோணுேக்கம்'' எனும் வரியில் வரும் 'சோறு' எனும் சொல் 'புண்ணியம்' எனும் பொருள் தருவதைக் காணலாம். எனவே சோழ நாடு புண்ணியம் உடையநாடு எனப் படுவதன் காரணம் மணல் எல்லாம் சிவலிங்கம் எனப்போற்றப்படும் காவிரியால் தான் என்பது வெள்ளிடைமலை. மேலும் தேவாரம்பாடல்

(27-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமியின்
# பிரம்மோற்சவம்



திருமலையில் நடைபெறும் உற்சவங்கள் எல்லாவற்றிலும் ஸ்ரீவேங்கடேசப் பெருமாளின் பிரம்மோற்சவம் வெகு விமர்சையாகவும், விசேஷமாகவும் நடத்தப்படுகிறது. பெருமானைத் தரிசிக்க வரும் ஆயிரக் கணக்கான பக்தர்களுடன் எப்பொழுதும் மகிழ்ச்சி ததும்ப உற்சவ நாட்களைப்போல் காட்சி அளிக்கும் திருமலை, பிரம்மோற்சவத்தின்போது கண்ணுக்கு விருந்தளிக்கும் தீபாலங்காரங்களுடனும், இனிமையான பத்திப் பாடல்களுடனும் மனதைச் சுத்தப்படுத்தும் புராண கதா காலக்ஷேபங்களுடனும், உற்சவத்திற்கேற்ற உற்சாகத்துடன் (திருமலையெங்கும்) விழாக்கோலம் பூண்டிருக்கும். பல்வேறு வாகனங்களின் மேல் எம்பெருமானுடைய வீதி புறப்பாடுகளையும் ஜாதி பேதமின்றி பகவானைத் தரிசிக்க வரும் பக்தர்களையும் காணும்போது பூலோகத்தில் வைகுண்டம் என்று ஒன்று இருக்குமானால் அது இதுவேதான் என்று உறுதிப்படுத்துவது போல் தோன்றும்.

காலத்துக்குத் தக்கவாறு மாறாமல் இந்த நாள்வரை சீர்குலையாமல் ஒரே மாதிரியாக நடத்தப்பட்டு வருகின்ற இந்த பிரம்மோற்சவம் சதுர்முகப் பிரம்மாவினால் ஆரம்பிக்கப் பட்டதென வராஹபுராணம், வேங்கடாசல மாஹாத்மியம், வேங்கடேச இதிஹாஸமாலை முதலிய நூல்களிலிருந்து தெரிய வருகிறது.

கால நிர்ணயத்திற்குக் கட்டுப் படாத புராணங்களை விட்டு ஆராய்ந்ததில், ஏழாவது நூற்றாண்டில் பல்லவராஜ வம்சத்தின் இராஜ குமாரியான சமவாய் என்றவள் இந்த உற்சவத்திற்காகச் சில மான்யங்களையும் தங்கத்தையும் கொடுத்ததோடு மட்டுமின்றி வெள்ளியில் செய்யப்பட்ட மணவாளப் பெருமானின் உற்சவ விக்கிரஹத்தையும் கோவிலுக்குக் கொடுத்ததாகச் சில சாஸனங்களால் தெரிய வருகின்றது. புரட்டாசி, மார்கழி மாதங்களில் மட்டுமல்லாமல், ஆடிமாதம் கூட அதி விசேஷமாக உற்சங்கள் நடைபெற்றதாகச் சாஸனங்கள் தெரிவிக்கின்றன. இத்துடன் விஜய நகராதிபதியான இரண்டாவது ஹரிஹர ராயர் என்றவர் மற்றொரு பிரம்சவத்தை ஏற்படுத்தி அதற்கான மான்யங்களையும் கொடுத்தாராம்!

வெவ்வேறு மாதங்களில் திருவிழாவைப் போல் பிரம்மோற்சவங்கள் எத்தனையோ நடைப்பெற்றதாகச் சரித்திரத்தில் இருந்தாலும், பிரம்மாவினால் ஏற்படுத்தப்பட்ட புரட்டாசி மாதப் பிரம்மோற்சவம் ஒன்றுதான் இப்போது நிலைத்து நின்றுள்ளது. மூன்றாண்டுகளுக்கு ஒரு முறை வரும் அதிக மாதத்தினால் பாத்ர பதத்தில் ஓர் உற்சவமும், நவராத்திரி உற்சவம் என்ற பெயரில் (புரட்டாசி) ஆச்வயுஜ மாதத்தில் இன்னொரு பிரம்மோற்சவமும் நடைபெறுகின்றன.

பேருக்குப் பத்துநாள் உற்சவம் என்றாலும், முதல்நாள் அதிக கவர்ச்சியின்றிக் கடந்துவிடும். அன்று மாலை எம்பெருமானின் சேனாதிபதியாகிய ஸ்ரீவிஷ்வக்ஸேனர் எழுந்தருளி, திருவீதி ஊர்வலம் வந்து, கல்யாண மண்டபத்தில் ஏற்படுத்தப்பட்ட யாகசாலையில் உள்ள குண்டத்திற்கு வேண்டிய மண் எடுத்துக்கொண்டு திரும்பி எழுந்தருளுவார். மறுநாளிலிருந்து நடைபெறும் உத்ஸவத்திற்கு வருமாறு இதர தேவதைகளுக்கு அழைப்பு விடுதல், திருமலைராய மண்டபத்தில் நடைபெறும் ஆஸ்தானத்தில் ஸ்ரீசேனாபதியாருக்கு சன்மானம் செய்தல் முதலியவை நடைபெறும்.

இரண்டாவது நாள் உற்சவமூர்த்தியான மலையப்பஸ்வாமி, ஸ்ரீதேவி, பூதேவிகளுடன் திருமலைராயர் மண்டபத்தில் எழுந்தருளச் செல்வார்கள். குறிப்பிட்ட முகூர்த்தத்தில் மங்கள வாத்ய, வேதகோஷங்களின் நடுவில் முக்கிய அர்ச்சகரால் கருடத்வஜா ரோஹணம் நடத்தப்படும்.

பிரம்மோற்சவம் என்ற பெயருக்கேற்றாற்போல் ஒவ்வொரு நாளும் எம்பெருமாளின் திருவீதிவலத்திற்கு முன் பிரம்ம ரதம் என்ற சிறிய ரதம் ஒன்றை ஓட்டிச்செல்வார்கள். மறைமுகமாக இந்த உற்சவத்திற்கு பிரம்மா தலைமை தாங்குகிறாராம். அந்தநாள் இரவு உற்சவமூர்த்தியான மலையப்பஸ்வாமி தம் உபயநாச்சிமார்களுடன் பெரிய சேஷ வாகனத்தில் எழுந்தருளுவார்.

மறுநாள் காலை மலையப்பஸ்வாமிக்கு சிறிய சேஷவாகனத்திலும், இரவு ஹம்ஸவாகனத்திலும் திருவீதி உத்ஸவம் நடத்தப்படும்.

மூன்றாவதுநாள் காலை மலையப்பஸ்வாமிக்கு சிம்ஹ வாகனத்திலும், இரவு முத்துப்பந்தலிலும் ஊர்வலம் நடைபெறும்.

நான்காவது நாள் காலை கண்கொள்ளாக் காட்சியாக எம்பெருமானுக்கு உபயநாச்சிமார்களுடன் கல்பக விருக்ஷ வாகனத்தில் (புன்னை மரம்) திருவீதி ஊர்வலம் நடைபெறும். இதைக் காணும்போது-எல்லாவற்றையும் விட்டுவிட்டு தன்னைச் சரணடைந்தோர்க்குக் கேட்ட வரங்கள் எல்லாம் வழங்கும் கல்பக



கருட வாகனம்

விருக்ஷும் நான்தான் எனத் தெரிவிப் பவர்போல் எம்பெருமான் காட்சி அளிப்பார். அந்நாள் இரவு ஸர்வ பூபால வாகனத்தில், பௌர்ணமி நிலவுபோல் காணப்படும் மின்சார விளக்கின் ஒளியுடன் கூடி உபய நாச்சிமார்களுடன் பெருமாள், "கஷ்டப்படுகிறோம், கருணை செய்" என்று கை கூப்பி மெய்மறந்து நிற்கும் பக்தர்களுக்கு 'வருந்தாதீர்கள், உங்களுக்கு நானிருக்கிறேன்' என்று கூறுபவர்போல் விளங்குவார்.

ஐந்தாவது நாளன்று அதி முக்கியமாகிய மோகினி அவதாரம். அன்று பெருமாள் பெண் கோலம் பூணுவார். பாற்கடல் கடைந்த போது கிடைத்த அமிர்தத்திற்காகத் தேவர்களும் அசுரர்களும் போர் செய்தபோது தீயவர்களைத் தண்டித்து நல்லவர்களைக் காப்பாற்ற மோகினி அவதாரம் எடுத்து, அசுரர்களை ஏமாற்றி தேவர்களுக்கு அமிர்தம் கொடுத்த ஜகந்மோகன அவதாரம்தான் இந்த மோகினி அவதாரம்! காமதேவனைச் சாம்பலாக்கிய சிவபெருமானையே மயக்கிய இந்த மோகினியைப் பற்றி புராணங்களில் மிக நன்றாக வர்ணிக்கப்பட்டுள்ளது. இவ் உற்சவத்தின்போது அதிக அலங்காரங்கள் செய்து, உடைகளை மாற்றி, வரதஹஸ்தத்தை மாற்றி, மோகினியை போலவே விசேஷ அலங்காரம் செய்து தந்தத்தினால் செய்த பல்லக்கில் எம்பெருமானுக்கு ஊர்வலம் நடத்தப்படும். அன்று அந்தப் பெருமானைக் காண்பவர் கொடுத்து வைத்தவர்கள்தான்.

பிரம்மோற்சவத்திலேயே அதி விசேஷமானது-அதி முக்கியமானது கருடோத்ஸவம். நாட்டின் நான்கு மூலைகளிலிருந்தும் பக்தப் பெருமக்கள் பெரும்பாலராகக் கூடி அதிகாலையிலிருந்தே கோவிலின் அருகே காத்திருக்க, வருடத்திலேயே அன்றொரு நாள்தான் மகரகண்டி, லக்ஷ்மீ ஹாரம் முதலிய விசேஷ ஆபரணங்களை அணிந்து கொண்டவராய் கலியுக வைகுண்டப் பெருமாள், கருட வாகனத்தில் திருவீதிவலம் வருவார். அதைக் கண்டு வர்ணிக்க சக்தியுடையோர் அதிருஷ்டசாலிகள் தான்! இந்தக் கண் கொள்ளாக் காட்சியைக் காண்போருக்கு மறுபிறவி இல்லையோ எனத் தோன்றும்.

ஆறாவது நாள் ஸ்ரீ மலையப்ப ஸ்வாமி அழகாக அலங்கரிக்கப்பட்டு ஹனுமந்த வாகனத்தில் ஊர்வலம் வருவார். அன்று மாலை ஸ்ரீ மலையப்பஸ்வாமி உபயநாச்சிமார்களுடன் மேற்குத் தெருவில் உள்ள வஸந்த மண்டபத்தில் எழுந்தருளுவார். அங்கு அவருக்கு ஸுகந்த த்ரவ்யங்கள் கலந்த நீரினால் திருமஞ்சனம் நடைபெறும். அன்றிரவு பெருமானுக்கு யானை வாகனத்தில் திருவீதி உற்சவம் நடைபெறும்.

ஏழாவது நாள் காலை சூரியப் பிரபையிலும், இரவு சந்திரப்பிரபையிலும் நடக்கும் ஊர்வலத்தைக் கண்டால் சூரிய சந்திரர்களைக் கூட ஆள்பவன் நான்தான் எனக் கூறுவதற்காகவே பெருமாள் புறப்பட்டாரோ எனத் தோன்றும்.

எட்டாவது நாள்தான் இரதோத்ஸவம். அன்று காலை மலையப்ப ஸ்வாமி அதி விசேஷமாக அலங்கரித்துக் கொண்டு, தன் இரு பக்கங்களிலும் நாச்சிமார் இருவரும் நிற்க, கலா வைபவத்துடன் விளங்கும் தேரில் ஏறி காட்சியளிப்பார். ஆயிரக்கணக்கான பக்தர்கள் ஆனந்த பரவசத்தில் கோவிந்த நாமத்தைத் துதித்துக் கொண்டே இரதத்தில் கட்டிய வடத்தைப் பிடித்து இழுத்துச் செல்வதைக் காண மிக மகிழ்ச்சியாக இருக்கும். அன்றிரவு எம்பெருமான் குதிரை வாகனத்தில் காட்சியளிப்பார்.

ஒன்பதாவது நாள் அன்று அவப்ருத உற்சவம் (தீர்த்தவாரி) நடைபெறும். இது தான் கடைசி உற்சவம். உபயநாச்சிமார்களுடன் ஊர்வலமாக ஸ்வாமி புஷ்கரிணியின் அருகில் உள்ள ஆதிவராஹஸ்வாமி ஸன்னதியை அடைவார். அங்கு பண்டிதர்களால் குறிப்பிடப்பட்ட முகூர்த்தத்தில் எம்பெருமானுக்குத் திருமஞ்சனம் நடைபெறும். வேங்கடேசப் பெருமானின் பிரம்மோத்ஸவம் சுபமாக முடிந்ததற்கு அறிகுறியாக ஸுதர்சன சக்கரத்திற்கு ஸ்வாமி புஷ்கரணியில் திருமஞ்சனம் நடைபெறும். சுற்றுப்புரத்திலிருந்து ஆயிரக்கணக்கானவர்கள் திருமலையில் ஸ்வாமி புஷ்கரிணி அருகில் காத்திருந்து, சக்ர ஸ்நாநம் நடைபெறும் சமயத்தில் கோவிந்த நாமகோஷம் செய்த வண்ணமாக ஸ்வாமி புஷ்கரிணியில் ஸ்நநாம் செய்வார்கள். முக்கோடி நதிகள் கலக்கும் சமயத்தில் புஷ்கரணியில் முழுகினால் பாவங்கள்

(28-ம் பக்கம் பார்க்க)

ரதோற்சவம்



# திருமங்கை ஆழ்வார்

காவிரி நதி பாயும் சோழ வள நாட்டின் உட் பிரிவுகளில் ஒன்று திருவாலி நாடு. அது ஒரு சிறு நாடு. திருக்குறையலூர் என்பது அந்நாட்டின் ஊர்களில் ஒன்று.

அந்நாட்டில் சிறந்த செல்வரும் கள்ளர் மரபில் தோன்றிய வருமான அலி நாடர் என்பவர் சோழ அரசனுடைய சேனைத் தலைவர்களில் ஒருவர். அவருக்கும் வல்லித்திரு என்ற திருப்பெயர் உடைய அவர் மனைவிக்கும் பிறந்தவரே நீலன் என்ற பிள்ளைத் திருநாமம் கொண்ட திருமங்கை ஆழ்வார்.

திருமங்கை ஆழ்வார் கி. பி. 8-ம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர். வைணவ மரபில் இவரை திருமாலின் ஐம்படைகளில் ஒன்றாகிய சார்ங்கம் என்னும் வில்லின் அமிசமாகக் கொள்வர்.

இளமையிலேயே இருமொழிகளை முறையாக நன்கு பயின்று நாற்கவிகளையும் இயற்றும் ஆற்றலைப் பெற்றார். அதோடு நால்வகை சேனைப் பயிர்ச்சிகளையும் மேற்கொண்டு தேர்ந்து விளங்கினார். இச்சிறப்புக்களால் இவரும் சேனைத் தலைவர்களுள் ஒருவராக அரசனால் ஏற்றுக் கொள்ளப்பட்டார். பிறகு படிப்படியாக தன் ஆற்றலால் ஆலி நாட்டை, திருமங்கை என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு பரிபாலிக்கும் ஒரு முதன்மை வாய்ந்த சேனைத் தலைவர் பதவியும் பரகாலன் என்னும் பட்டமும் இவருக்குச் சோழ மன்னனால் அளிக்கப்பட்டது.

சுமங்கலை என்ற தேவ மாது கபில முனிவரின் ஒரு சாபத்தால் தென்னாட்டில் திருநாங்கூரில் ஓர் அழகிய பொய்கையில் ஓர் அல்லி மலரின் மேல் குழந்தையாகத் தோன்றினாள். அப்பதியில் வாழ்ந்த ஒரு சிறந்த திருமாலடியாராகிய வைத்தியர் அவரைக் கண்டு, எடுத்துச் சென்று தனக்கு மக்களில்லாத குறையினை நீக்கி இக்குழலியை குமுதவல்லி என்று பெயரிட்டு போற்றி வளர்த்து வந்தார்.

திருமணப் பருவம் அடைந்த குமுதவல்லிக்கு, மணமுடிக்க முயன்ற போது, குமுதவல்லி தன் தந்தையாகிய மருத்தவரிடம், தன் பிறவி நோக்கத்தை வெளியிட்டாள். அதாவது தான் தெய்வ மகளாயினும், மானுட வடிவில் தோன்றியது நீலன் என்னும் பரகாலரை சிறந்த வைணவ அடியாராகத் திருத்துவதற்கே யாகும் என்பதாகும்.

இஃது இங்ஙனமாக, பரகாலர் குமுத வல்லியின் அழகைப் பற்றியும் மற்ற நலங்களைப் பற்றியும் கேள்வியுற்று, தன் சுற்றத்தோடு திருநாங்கூர் சென்று மருத்துவரின் மனையை அடைந்து குமுத வல்லியை தனக்கு மண முடிக்க அவள் வளர்ப்புத் தந்தையை வேண்டினார். அவரோ பெண்ணின் விருப்பத்தைக் கேட்ட போது குமுதவல்லி இரண்டு நிபந்தனைகளை விடுத்தாள் – ஒன்று; பரகாலர் தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழி திகழ் திருச்சக்கரத்தின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு, எம்பெருமானுக்கு மகிழ யாம் செய்யும் தொண்டர் குலத்தவராய் வருதல் வேண்டும். இரண்டாவது: ''நாள்தோறும் ஆயிரம் திருமாலடியார்களுக்கு அமுது அளித்தல் வேண்டும்'' என்று.

அது கேட்டு நீலன் திருநறையூர் நம்பியின் திருமுன் வந்து, இறைவன் பால் தன் கருத்தைச் சொல்லி, நம்பியால் திருவிலச்சனை முதலியன அளிக்கப் பெற்றுத் திருமண் அணிந்து, தொண்டர் குலத்தவராய் குமுத வல்லியை அடைந்து அவளை சிறப்பாக மணந்துகொண்டு இல்லறத்தை மேற்கொண்டார்.

பிறகு பரகாலர் குமுதவல்லியின்பால் தாம் கூறியபடி ஒவ்வொரு நாளும் ஆயிரம் பாகவதர்களுக்கு அன்புடன் அறுசுவையோடு கூடிய அன்னமிட்டு அவர்களை ஆராதித்து வந்தார். அதன் பொருட்டுத் தம்முடைய நாட்டினின்று தமக்குக் கிடைக்கும் குடியிறைப் பொருளையெல்லாமும் செலவிடலானார். சோழ அரசனுக்குத் தான் கட்ட வேண்டிய கப்பப் பொருளைச் செலுத்த அவரால் இயலவில்லை. அரசனுக்கு வரியைக் கொடாது போகவே, அரசன் பலவழிகளிலும் முயன்று இவரிடம் கப்பப் பொருள் பெற இயலாமையால் இவரைச் சிறையிலடைத்தான். சிறையில் உண்ணாதும், உறங்காதும் வாடி இருந்தபோது காஞ்சி அருளாளப் பெருமாள் அவர் கனவில் தோன்றி கச்சிப்பதியின் வேகவதி ஆற்றில் பொருள் மறைந்திருப்பதை உணர்த்தி, அதை எடுத்து அரசனுக்குரிய கப்பப் பொருள் செலுத்த அருள் பாலித்தார்.

திரு. என். எஸ். ராஜன்,
திருவண்ணாமலை.

அதன்படியே, அரசனுடைய காவலாட்களோடு காஞ்சிப்பதி அடைந்து அங்கு வேகவதி ஆற்றினின்றுப் பொருள்மீட்டு அரசனுக்குச் சேர வேண்டிய கடனை அடைத்ததும் சிறை தண்டனையினின்றும் விடுதலை அடைந்து தன் ஊர் சென்றார். அங்கு மீண்டும் குமுதவல்லியுடன் இனித்திருந்தும், எஞ்சிய பொருளைக் கொண்டு வழக்கம் போல் பாகவதத் தொண்டும் செய்து வந்தார்.

கைப் பொருளெல்லாமும் தீர்ந்து விட்டது. மேல் வருவாயில்லை. அடியார் தொண்டோ நடந்தே தீர வேண்டும். என்ன செய்வது?

[46-ம் பக்கம் பார்க்க]

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

பெற்ற தலங்கள் மொத்தம் 274 ஆகும். அவற்றுள் காவிரி பாயும் சோழ நாட்டில் மட்டும் உள்ள தலங்கள் 190. காவிரியின் வட கரையில் 93 தலங்களும், தென் கரையில் 127 தலங்களும் அமைந்துள்ளது சிறப்புடைத்தேயாகும்.

மின்னலைப் போன்று தோன்றி மறையும் வாழ்வை விரும்பி வாழ்ந்து வரும் மக்கட்கு மின்சாரத்தைத் தருவதும் காவிரியே ஆகும். இம்மையில் உயிர்கள் வாழ சோற்றைத் தருவதும், மறுமைக்குரிய 'சோறு' — புண்ணியத்தைத் தருவதும் காவிரியே ஆகும். 'கோயில்' என்றால் சைவர்கட்கு சிதம்பரமும், வைணவ அடியார்கட்கு ஸ்ரீரங்கமும் குறிப்பதாகும். இவ்விரு முத்தித்தலங்களும் காவிரியின் கரைகளில் அமைந்துள்ளதை அறியலாம்.

இராஜ இராஜ சோழன் குழந்தைப் பிராயத்தில் குடும்பத்தாருடன் காவிரிநதியில் படகில் சென்றுகொண்டிருந்தான். அப்பொழுது வெள்ளத்தில் மிதந்து வந்த பூவை எடுக்க முயன்று நதியில் வீழ்ந்து மூழ்கிவிட்டான். குழந்தையைக் காணுமல் எல்லோரும் கதறி நின்ற நேரத்தில் ஓர் பெண் வடிவில் காவிரித்தாய் வெள்ளத்திலிருந்து கையில்குழந்தையுடன் எழுந்து படகில் அக்குழந்தையை விட்டு மறைந்தாள் என வரலாறு கூறுகிறது. பிறவி எனும் பெருங்கடலில் மூழ்கித் தவிக்கும் நாமும் காவிரித்தாயின் புனல்விழாவில் பங்கேற்று காவிரித்தாயால் முத்தி எனும் கரையைச் சென்று சேர்வோமாக!

## சோழநாட்டுச் சிவத்தலங்கள் 190

இவற்றுள்

**1. காவிரியின் வடகரையில் உள்ள தலங்கள்—63.**

1. கோயில் (சிதம்பரம்)
2. திருவேட்களம்
3. திருநெல்வாயில் (சிவபுரி)
4. திருக்கழிப்பாலை
5. நல்லூர்ப் பெருமணம் (ஆச்சாபுரம்)
6. திருமயேந்திரப்பள்ளி
7. தென்திருமுல்லைவாயில்
8. திருக்கலிக்காமூர் (அன்னப்பன் பேட்டை)
9. திருச்சாய்க்காடு (சாயாவனம்)
10. திருப்பல்லவனீச்சுரம்
11. திருவெண்காடு
12. கீழைத்திருக்காட்டுப்பள்ளி
13. திருக்குருகாவூர்
14. சீர்காழி
15. திருக்கோலக்கா
16. புள்ளிருக்கு வேளூர் (வைத்தீஸ்வரன் கோயில்)
17. திருக்கண்ணார் கோயில் (குறுமாணக்குடி)
18. திருக்கடைமுடி (கீழையூர்)
19. திருநின்றியூர்
20. திருப்புன்கூர்
21. திருநீடூர்
22. அன்னியூர்
23. வேள்விக்குடி
24. எதிர்கொள்பாடி (மேலைத் திருமணஞ்சேரி)
25. திருமணஞ்சேரி (கீழைத் திருமணஞ்சேரி)
26. திருக்குறுக்கை
27. கருப்பறியலூர் (மேலைக்காழி)
28. குரக்குக்கா
29. மண்ணிப்படிக்கரை
30. திருவாளொளிபுற்றூர்
31. திருநாரையூர்
32. ஓமாம்புலியூர்
33. கானாட்டுமுள்ளூர்
34. பந்தணைநல்லூர்
35. கடம்பூர்
36. கஞ்சனூர்
37. திருக்கோடிக்கா
38. திருமங்கலக்குடி
39. திருப்பனந்தாள்
40. திருஆப்பாடி
41. திருச்சேய்நலூர்
42. திருந்துதேவன்குடி
43. திருவியலூர்
44. கொட்டையூர்
45. இன்னம்பர்
46. திருப்புறம்பயம்
47. விசயமங்கை
48. திருவைகாவூர்
49. வடகுரங்காடுதுறை
50. திருப்பழனம்
51. திருவையாறு
52. திருநெய்த்தானம்
53. பெரும்புலியூர்
54. திருமழபாடி
55. திருப்பழுவூர்
56. திருக்கானூர்
57. அன்பிலாந்துறை
58. திருமாந்துறை
59. திருப்பாற்றுறை
60. திருவானைக்கா
61. திருப்பைஞ்ஞீலி
62. திருவாசி (திருப்பாச்சிலாச்சிரமம்)
63. திருஈங்கோய்மலை

**காவிரியின் தென்கரையில் உள்ள தலங்கள் 127**

1. திருவாட்போக்கி (ஐயர் மலை)
2. கடம்பந்துரை (குழித்தலை)
3. திருப்பராய்த்துறை
4. கற்குடி (உய்யக் கொண்டான்)
5. மூக்கீச்சுரம் (உறையூர்)
6. திருச்சிராப்பள்ளி
7. எறும்பியூர்
8. நெடுங்களம்
9. மேலைத்திருக்காட்டுப்பள்ளி
10. திருவாலம்பொழில்
11. திருப்பூந்துருத்தி
12. கண்டியூர்
13. திருச்சோற்றுத்துறை
14. திருவேதிகுடி
15. தென்குடித்திட்டை
16. திருப்புள்ளமங்கை
17. சக்கரப்பள்ளி (ஐயம்பேட்டை)
18. திருக்கருகாவூர் (திருக்களாவூர்)
19. திருப்பாலைத்துறை
20. திருநல்லூர்
21. ஆவூர்
22. திருச்சத்திமுத்தம்
23. பட்டீச்சுரம்
24. பழையாறை வடதளி
25. திருவலஞ்சுழி
26. குடமூக்கு (கும்பகோணம்)
27. குடந்தைக் கீழ்கோட்டம் (கும்பகோணத்திலுள்ள நாகேசுர சுவாமி கோயில்)
28. குடந்தைக்காரோணம் (கும்பகோணத்திலுள்ள காசி விசுவநாதர் கோயில்)
29. திருநாகேச்சுரம்
30. திருவிடைமருதூர்
31. தென்குரங்காடுதுறை (ஆடுதுறை)
32. திருநீலக்குடி (தென்னலக்குடி)
33. வைகன்மாடக் கோயில்
34. திருநல்லம் (கோனேரி ராயபுரம்)
35. கோழம்பம்
36. திருவாவடுதுறை
37. திருத்துருத்தி (குற்றாலம்)
38. திருவழுந்தூர்
39. திருமயிலாடுதுறை (மாயூரம்)
40. திருவிளநகர்
41. திருப்பறியலூர் (பரசலூர்)

42. திருச்செம்பொன்பள்ளி
43. திருநனிபள்ளி
44. திருவலம்புரம்
45. தலைச்சங்காடு
46. ஆக்கூர்
47. திருக்கடவூர்
48. திருக்கடவூர் மயானம்
49. திருவேட்டக்குடி
50. திருத்தெளிச்சேரி
51. தருமபுரம்
52. திருநள்ளாறு
53. கோட்டாறு
54. அம்பர்ப்பெருந்திருகோயில்
55. அம்பர்மாகாளம்
56. திருமீயச்சூர்
57. திருமீயச்சூர் இளங்கோயில்
58. திலதைப்பதி (மதிமுத்தம்)
59. திருப்பாம்புரம்
60. சிறுகுடி
61. திருவீழிமிழலை
62. திருவன்னியூர்
63. கருவிலி
64. பேனுபெருந்துறை (திருப்பந்துறை)
65. நறையூர்ச் சித்தீஸ்வரம்
66. அரிசிற்கரைப் புத்தூர்
67. சிவபுரம்
68. கலயநல்லூர் (சாக்கோட்டை)
69. கருக்குடி (மருதாந்த நல்லூர்)
70. திருவாஞ்சியம்
71. நன்னிலம்
72. திருக்கொண்டீச்சுரம்
73. திருப்பனையூர்
74. திருவிற்குடி
75. திருப்புகலூர்
76. திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம்
77. இராமனதீச்சுரம்
78. திருப்பயற்றூர்
79. திருச்செங்காட்டங்குடி
80. திருமருகல்
81. திருச்சாத்தமங்கை
82. நாகைக்காரோணம் (நாகபட்டினம்)
83. சிக்கல்
84. கீழ்வேளூர்
85. தேவூர்
86. பள்ளியின் முக்கூடல் (அரியான்பள்ளி)
87. திருவாரூர்
88. திருவாரூர் அரநெறி
89. திருவாரூர்ப் பரவையுண்மண்டளி
90. திருவிளமர்
91. கரவீரம் (கரையபுரம்)
92. பெருவேளூர் (காட்டூரையன் பேட்டை)
93. தலையாலங்காடு
94. குடவாயில்
95. திருச்சேறை
96. நாலூர் மயானம்
97. கடுவாய்க்கரைப் புத்தூர்
98. இரும்பூளை (ஆலங்குடி)
99. அரதைப்பெரும்பாழி (அரித்துவார மங்கலம்)
100. அவளிவணல்லூர்
101. பரிதிநியமம்
102. வெண்ணி (வெண்ணியூர்)
103. பூவனூர்
104. பாதாளேச்சுரம்
105. திருக்களர்
106. சிற்றேமம்
107. திருவுசாத்தானம்
108. இடும்பாவனம்
109. கடிக்குளம்
110. தண்டலை நீணெறி
111. கோட்டூர்
112. திருவெண்டுறை
113. கொள்ளம்புதூர்
114. பேரெயில் (ஓகைப் பேரையூர்)
115. திருக்கொள்ளிக்காடு
116. திருத்தெங்கூர்
117. திருநெல்லிக்கா
118. திருநாட்டியத்தான்குடி
119. திருக்காறுயில் (திருகாறை வாசல்)
120. கன்றாப்பூர்
121. வலிவலம்
122. கைச்சினம்
123. திருக்கோளிலி
124. திருவாய்மூர்
125. திருமறைக்காடு (வேதாரணியம்)
126. அகத்தியான்பள்ளி
127. திருக்கோடி (குழகர் கோயில்)



---

(25-ம் பக்கத் தொடர்ச்சி)

நீங்கி நிச்சயமாக மோக்ஷம் கிடைக்கும் என்று புராணங்களில் கூறப்பட்டுள்ளது.

அபிஷேகத்திற்குப் பிறகு எம்பெருமான் கோவிலுக்குத் திரும்புவார். முதல் நாள் அன்று உற்சவ ஆரம்பத்திற்கு அறிகுறியாக ஆரோகணம் செய்யப்பட்ட கருடத்வஜத்தை இறக்கி, மங்களகரமாக உற்சவம் முடிந்ததற்காக மங்களாக்ஷதை விநியோகம் நடைபெறும்.

மேற்குறிப்பிட்ட ஆலய வைபவங்களோடு இந்த பத்து நாட்களும் ஆர்ஷஸம்ஸ்க்ருத சபையின்சார்பாக புராண, சங்கீத உபந்யாஸங்களும், நாம சங்கீர்த்தனைகளும் நடைபெறும் மூன்று வருடங்களுக்கு ஒரு தடவை அதிக மாதத்தினுல் நவராத்திரி உற்சவம் என்ற பெயரில் ஒரு பிரம்மோற்சவம் நடைபெறும். இந்த உத்ஸவத்தில் வெள்ளி ரதத்தில் பெருமாளுக்கு ஊர்வலம் நடைபெறும்.

உற்சவங்கள் எல்லாவற்றிலும் பிரம்மோற்சவம் அதி முக்கியமாகவும், இணையற்றதாகவும் கருதப்படுகிறது. ஏனெனில் எந்த உற்சவத்திலும் இவ்வளவு மக்கள் ஒரே சமயத்தில் கூடி பகவானின் அருளைப்பெறுபெறுவதையும், இவ்வளவு விசேஷங்களையும் ஒரே சமயத்தில் கண்டு களிப்பதையும் காண முடியாது. ஐஹிக சுகங்களுக்கு ஆளாகி, மமகார - அகுமைகளுடன் நிறைந்த நம் உள்ளத்தைப் பெருமாளின் தரிசன, குண கீர்த்தனங்களால் சுத்தப்படுத்திநல்ல வழிக்குத் திருப்பி மறுபிறவி இல்லாமல் செய்வதே இவ்வித உற்சவங்களின் குறிக்கோள். நம்மிடம் உள்ள ஜோதி நம்மைப் பிரிந்திருந்தாலும், க்ஷணிக சுகத்திலிருந்து நம்மை விடுவித்து மக்களுக்கு நிலையான ஆனந்தத்தை விளைவிக்கும் எம்பெருமானுகிய ஜோதி என்றும் மாறுததாகும்; அணையாததும் ஆகும்.



# காவிரி

## முன்னுரை

'நீரின்றமையாது உலகு' என்பது வள்ளுவம். உலக வளத்திற்குக் காரணமாக விளங்கும் நீர் கடல், ஆறு, ஏரி, குளம், கிணறு போன்ற பெயரினைப் பெற்று சிற்றூர்களுக்கும் பேரூர்களுக்கும், நகரங்களுக்கும், நாடுகளுக்கும் வளத்தை வழங்குகின்றன. நாகரீகங்களைத் தோற்றுவிக்கும் பெருமை கொண்டவை ஆறுகளே. நதிக்கரைகளில் அமைந்த நகரங்களே நாகரீக வளர்ச்சியின் தொட்டில்கள். அதனால்தான் நற்றமிழ்ப் புலவர்கள் பலரும் ஆற்றினைப் பாராட்டிப் பாடி மகிழ்ந்தார்கள்.

## காவிரியின் பெருமை

ஆறுகள் பலவற்றுள்ளும் சிறந்த பெருமையைக் கொண்டது காவிரி. அதனால்தான் நூற்றாண்டுப் பாடகன் பாரதி,

'' காவிரி தென்பெண்ணை பாலாறு
—தமிழ்
கண்டதோர் வையை பொருநை நதி
—என
மேவிய யாறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு ''

என்று தமிழ்நாட்டின் வளத்திற்குக் காரணமாக விளங்கும் ஆறுகளில் காவேரியையே முதலில் வைத்துப் பாடினார். தமிழ் மண்ணின் மேனி செழிக்க வைக்கும் காவிரியைக்காண்போம்.

## சோழர் தம் குலக்கொடி

காவிரியாறு பிறந்தது குடகு நாட்டில். குதித்து விளையாடி மகிழ்ந்தது கொங்கு நாட்டில். வளம் வழங்கி வாழ்வு தந்து கடலோடு கலப்பது சோழ நாட்டில். 'சோழர் தம் தெய்வக்காவிரி' என்று இளங்கோவடிகளும் 'பாடல்சால் சிறப்பில் பரதத்து ஓங்கிய கோடாச் செங்கோல் சோழர் தம் குலக்கொடி' என்று சீத்தலைச் சாத்தனாரும் காவிரியை நாவாரப் பாராட்டினார்கள்.

## காவிரியின் புகழ்பாடும் பொன் வரிகள்

பிறந்த இடத்தில் மிடுக்காக வாழ்ந்து, புகுந்த இடத்தில் அடக்கத்தின் நிலைக்களமாவது பெண்களின் இயல்பு. காவிரி நங்கைக்குக் குடகு தாய் வீடு. தமிழகம் புகுந்த வீடு. தாய் வீட்டில் குதித்துக் குதித்து ஓடி வந்தாலும், புகுந்த வீட்டிற்கு வந்தவுடன் பொறுப்பினை உணர்ந்து செயல் புரியும் சிறப்பைக் காண்கிறோம். தன் வளம் மட்டுமன்றி, தன் தோழிகளான ஹேமாவதி, லட்சுமண தீர்த்தம், பவானி, அமராவதி ஆகியோரின் வளத்தையும் சேர்த்து, தன் மக்களுக்கு வழங்கி மெலிந்து

புலவர். பெ. வேலு எம்.ஏ.பி.எட்.,
தாரமங்கலம்.

தேய்ந்து ஒரு முதிய தாயைப் போல கடலோடு சென்று கலக்கின்றாள். இக்காட்சியைச் சிலம்பு,

வாழி அவன்தன் வளநாடு
மகவாய் வளர்க்கும் தாயாகி
ஊழி உய்க்கும் பேருதவி
ஒழியாய் வாழி காவேரி.

என்று கூறிப் பாராட்டுகிறது.

பட்டினப்பாலை என்னும் பாங்கான நூல்,

'' கோள்நிலை திரிந்து கோடை நீடினும்
தான்நிலை திரியாத் தண்டமிழ்ப்
பாவை ''

என்று வளம் சுருங்கா மாண்பை வாழ்த்துகிறது. தேனினும் இனிய தீந்தமிழ்ப் பாடல்களால் ஊனினை உருக்கிய ஞான சம்பந்தப் பெருமான், கடலில் உள்ள சங்குகள் காவிரியில் கலந்து எதிரேறி வந்து ஐயாற்றை அடையும் மாட்சியைக் காட்டுகின்றார். கருமுகில் வண்ணனின் அடிவருடி காவிரி வழிபடும் சிறப்பை, திருவரங்கப் பெருவரங்கத்தானின் பெருமை பாடும் திவ்ய கவிகளில் பெரியாழ்வாரும் திருமங்கைமன்னனும் இணைத்துக் காட்டுகின்றனர்.

## புராணச் செய்திகள்

காவிரியைப் பற்றி ஆக்கினேய புராணத்திலும் கந்தபுராணத்திலும் பல செய்திகள் கூறப்பட்டுள்ளன. கவேர மன்னன் அந்தமில் இன்பத்து அழிவில் வீடடைய இமயச்சாரலில் கடுந்தவம் புரிந்தான். மன்னன் தவத்துக்கு இரங்கிய பிரமன், 'என் மகள் விஷ்ணு மாயையை மகளாக ஏற்றுப் போற்றுக. அதனால் நீ வீடு பேறடைவாய்' என்று அருளினார்.

படைப்புக் கடவுள் பணித்தபடி விஷ்ணுமாயை கவேர முனிவர்க்கு மகளாகி அம்முனிவர்க்கு அழியாப் பேரின்பத்தை நல்கினள். பின்னர் அவள் திருமாலை நோக்கித் தவம் புரிந்தாள். அவள் தவத்துக்கு இரங்கிய திருமால் அவள் முன் தோன்றி 'நீ கவேர முனிவர் மகளாக வளர்ந்த காரணத்தால் காவிரி என்ற திருப்பெயருடன் சையமலையின் உச்சியிலிருந்து ஆறாகப் பெருகுக' என்றும் 'உன்மற்றொரு அம்சத்தால் உலோபாமுத்திரை என்ற பெயரோடு அகத்தியரை மணக்கவேண்டும்' என்றும் அருள் புரிந்தார்.

இது இவ்வாறிருக்க, இமயமலைச் சாரலின் பக்கத்தில் அகத்திய மாமுனிவர் தவம் புரிந்து கொண்டிருந்தார். அவர் முன் நான்முகக் கடவுள்

தோன்றி துறவறம் பூண்டு கடுந்தவம் புரிவதினும், சுற்றம் புரிந்து வாழும் இல்லற வாழ்வே சிறந்தது என்று கூறி தம்மகள் உலோபா முத்திரையை மணந்து இல்லறம் புரிய வேண்டினர்.

வேதனின் கருத்தை ஏற்று அகத்தியர் உலோபா முத்திரையை மணம் புரிந்து கொண்டார். சிறிதுகாலம் கழித்து உலோபா முத்திரை வடிவுடன் விளங்கிய காவிரி நங்கையை நோக்கி 'நீ சைய மலையிலிருந்து காவிரி நதியாய்ப் பெருகி உலகை உய்விக்க வந்தவள். ஆகவே என் கரகத்தில் கங்கையோடு நீயும் கலப்பாயாக. உன்னைச் சைய மலையில் சேர்க்கிறேன்' என்று கூறினர். அகத்தியர் கரகத்தோடு தென்திசை நோக்கிப் புறப்பட்டார். சையமலை சென்ற அகத்தியர் ஒரு நெல்லி மரத்தினடியில் கரகத்தை வைத்தார். ஒரு பெருஞ்சுழற்காற்று வீசி கரகம் கவிழ்ந்தது. அதுவே ஆருக மாறி நானிலத்தோர் விளைபோக்கி நலம் கொடுத்தது.

கந்த புராணத்திலும் காவிரியின் வரலாறு கூறப்படுகிறது. அது பின் வருமாறு :

ஒரு காலத்தில் விந்திய மலை செருக்கு கொண்டு வானத்தின் வழியை மறித்து நின்றது. அதன் இறுமாப்பை அடக்கப் புறப்பட்ட அகத்தியர் 'நான் தென் திசையில் தவம் புரியும் போது தடையில்லாமல் வழிபாடு புரிய என்றும் வற்ருத நீரூற்றினை உடைய கிணறு ஒன்றினை அருள வேண்டும்' என்று கேட்டுக்கொண்டார். சிவபெருமான் கயிலையில் இருந்த காவிரி நதியை வரவழைத்து அகத்தியரின் கமண்டலத்தில் உறையுமாறு பணித்தார். 'அகத்தியர் என்று உன்னை நிலவுலகில் பாயுமாறு கை காட்டுகிருரோ, அன்று நீ ஆருய்ப் பெருகி நானிலத்தோரை வாழ்விப்பாய்' என்றும் அருளினர்.

அகத்தியர் தென்திசை வந்து, விந்தமலையை யடக்கி, கொங்கு நாட்டை அடைந்து தவம் புரிந்தார்.

இஃது இங்ஙனமாக, சூரபதுமனிடம் தோல்வி அடைந்த இந்திரன் சீகாழி வந்து மூங்கிலுருக் கொண்டு வாழ்ந்து வந்தான். தன் துயரம் நீங்க சிவனை நோக்கித் தவம் புரிந்தான். தன் வழிபாட்டிற்கென அழகிய நந்தவனம் ஒன்று அமைத்தான். அசுரர் ஏவலால் மேகம் மழை பொழியாமல் இந்திரன் அமைத்த நந்தவனம் நீரின்றி வாடியது. அப்போது முக்காலமும் உணர்ந்த நாரதர் சீகாழி வந்தார். நாரதர் விநாயகப் பெருமானை வழிபட்டு இக்குறை தீர்க்கலாம் எனக்கூற, அதன்படி விநாயகரை இந்திரன் வழிபட்டான்.

காவிரி நிலவுலகில் பாய வேண்டிய காலம் அஃதே எனக் கருதிய விநாயகர் கொங்கு நாட்டில் அகத்தியர் தவம் செய்யும் இடத்தை அடைந்தார். ஒரு காக உருக்கொண்டு அகத்தியர் கைக் கமண்டலத்தின்மீது அமர்ந்ததும் அகத்தியர் கண் விழித்துத் துரத்தினர். காக உருக் கொண்ட கணபதி அதுவே தக்க சமயமென்று கமண்டலத்தைக் கவிழ்த்து விட்டார். அது முதல் அது மண்ணுலகில் பாய்ந்து மக்களின் வாழ்வுக்கும் வளத்துக்கும் காரணமாக விளங்குகிறது; காகத்தால் கவிழ்க்கப் பெற்று ஆருய்ப் பெருகினமையால் 'காவிரி' என்றும், இந்திரன் அமைத்த கா செழிக்க விரிந்தமையால் காவிரி என்றும் அறிஞர் பெயர்க் காரணம் கூறுவர்.

## காவிரி அமைப்பு

புலவர் பாடும் புகழுடைய இப்பொன்னி நதி மேற்கே குடகு நாட்டில் தலைக்காவிரி என்னுமிடத்தில் உருவாகிறது. பின் மைசூர் நாட்டில் புகுந்து ஹாசன் மாவட்ட வழியாக வந்து ஹேமாவதி என்னும் ஆற்றையும் தன்னோடு இணைத்துக் கொண்டு கிருஷ்ணராச சாகரத்தில் சிறிது ஓய்வு கொள்கிறது. அங்கேதான் பிருந்தாவனம் என்னும் அழகு கொழிக்கும் இடத்தை அமைக்கிறது. மைசூரை விட்டு வந்த காவிரி மேலும் பல சிற்ருறுகளின் கூட்டுறவோடு சிவ சமுத்திர அருவியாகி, ஆடுதாண்டும் காவிரியாய்க் குறுகி கொங்கு நாட்டுக்குள் நுழைகிறது.

கொங்கு நாட்டுக்குள் நுழைகின்ற போதே ஹொகெனகல் நீர் வீழ்ச்சியாக வீழ்ந்து ஒரு மணப் பெண்போல அடங்கி ஒடுங்கிச் செல்ல முற்பட்டு விடுகின்ருள் காவிரி. மேட்டூர் என்னுமிடத்தில் தங்கி, பவானித் தோழியோடு சோழ நாட்டைத் தன் ஈரக் கரங்களால் வளப்படுத்தி கடலரசனோடு கலந்து போகின்ருள்.

கங்கையிற் புனிதமான காவிரியின் தோற்றமே தமிழ் மண்ணின் ஏற்றமாகும். மக்களின் நாகரீகத்தின் தோன்ருத் துணையாக நின்று, அவர் தம் வாழ்விலும் தாழ்விலும் பங்கு கொள்ளும் தாய் காவிரியே. இந்தத் தண்ணீரின் துணை பெற்ற காரணத்தால்தான் பண்பாட்டு கலாச்சார தொழில் வளர்ச்சியில் பொதுவாகத் தமிழ் நாடும் சிறப்பாக சோழ மண்ணும் சிறந்தோங்கின. தொழில் வளர்ச்சிக்கு மிகச் சிறந்த காரணமாக விளங்கும் மின்சாரம் உருவாக இம்மங்கையே தன் சாரம் தந்து ஒளிர்கின்ருள்.

## முடிவுரை

ஆகவே இதுவரை கூறியவற்றிலிருந்து காவிரியின் வரலாறு, பெருமை, வளம், அது வளர்த்த தொழில்கள் ஆகியவற்றினைக் கண்டோம்.

" காவிரி போற்றுதும் காவிரி
போற்றுதும்
நாவிரி தமிழில் நற்பாடல் பல தந்து
பூவிரி இன்னும்பொன் விரி"

எனச் சொல்லி வணங்குவோம்!



# காவிரி கண்ட கிருஷ்ணஸூரி

செல்வி. ஆர். ஹரிப்ரியா,
சிதம்பரம்.

கங்கையிற் புனிதமாய காவிரியின் கரையில் அமைந்துள்ள க்ஷேத்திரங்கள் பலப்பல. அவற்றுள் நெஞ்சையள்ளும் தஞ்சை மாவட்டத்திலே காவிரிக் கரையிலே கும்பகோணம் என்கிற குடந்தை அருகிலே சேங்கனூர் என்னும் பரம பாவனமான க்ஷேத்ரம் இருக்கிறது. அந்த க்ஷேத்திரத்திலே பால்யம் முதற்கொண்டே லக்ஷ்மி நாதனை க்ருஷ்ணனிடம் அனன்யமான பக்தியுடைய க்ருஷ்ணஸூரி என்கிற ஒரு வைஷ்ணவர் இருந்தார்.

இவர் கி. பி. 1227-ல் ஸர்வஜித் வருஷத்தில் ஆவணி மாதத்தில் க்ருஷ்ணபக்ஷம் அஷ்டமியும் ரோஹிணி நக்ஷத்திரமும் கூடிய சுப தினத்தில் ஸ்ரீ ஜயந்தியன்று பூர்வசிக ஸ்ரீ வைஷ்ணவ ப்ராஹ்மண குலத்தில், யாமுன தேசிகருக்கும், நாச்சியாரம்மாளுக்கும் திருக்குமாரராய் அவதரித்தருளினபடியால் அவர் 'க்ருஷ்ணன்' என்றும் "கண்ணன்" என்றும் திருநாமமிடப்பட்டார். இவரே பிற்காலத்தில் பெரியவாச்சான் பிள்ளை என்று புகழ் பெற்றவர்.

ஸ்ரீ க்ருஷ்ணஸூரி என்னும் பெரியவாச்சான் பிள்ளை இளமை முதற்கொண்டே இலக்கண இலக்கிய சமய நூற்களில் ஐயந்திரிபறக்கற்ற ஞானத்தால் ஸ்ரீ க்ருஷ்ணனிடம் எல்லையற்ற அன்பு கொண்டார். வேத சாஸ்த்ரங்களைக் கிளறிப் பார்த்து விஷ்ணு பக்தியே சாரமென்றுகொண்டு அளவற்ற ஆனந்தமடைந்தார்.

எப்போதும் கண்ணனையே பாடிக் கொண்டும் அவன் கல்யாண குணங்கள் கூறிக்கொண்டும் சுகமாக வாழ்ந்து வந்த வேளையிலே, ஒரு சமயம் தம் மனைவியுடன் திருவேங்கட யாத்திரை புறப்பட்டார். பாத சாரியாகவே பகவானை தரிசனம் செய்யத் துடித்துக்கொண்டு மலைகள் பல கடந்து திருமலை வந்து சேர்ந்தார். முக்கிய தீர்த்தங்களில் நீராடி, ஆதி வராகப்பெருமானையும், எம்பெருமானுரையும் வணங்கி, ஆலயத்துள் பிரவேசித்தார். அங்கு உலகநாயகனும் கருணைக் கடலும், சங்கு சக்ராயுதபாணியும், சர்வாலங்காரருபனும், நீலவர்ணனும், அழிவற்றப் பரம்பொருளுமாகிய திருவேங்கடப் பெருமானைத் தரிசனம் செய்து பூமியில் தண்டம் போல் விழுந்து வணங்கி, கண்ணீருடன் மெய்ச்சிலிர்ப்புடன் கூடியவராய் பக்தியினால் கலங்கிப் போனார். பரம பக்தரான அவர், சுந்தர ரூபனை ஸ்ரீனிவாசனை தினந்தோறும் தரிசனம் செய்ய ஆசைகொண்டு தனது பந்துக்களை மறந்து அங்கேயே வசிக்கலானார்.

ஒருநாள் ஒரு வைணவர் அவர் முன்வந்து ஒரு சாளக்கிராமத்தை அவரிடம் கொடுத்து சேங்கனூரின் ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளையின் பெற்றோர் அவரது பிரிவாற்றுமையினால் மிகவும் துன்பப்படுவதாகவும், உடன் சேங்கனூர் செல்லுமாறும் கூறினார். ஸ்ரீ க்ருஷ்ணஸூரியோ தனக்குத் தாய், தந்தை, பந்துக்கள் நண்பர்கள் பொருள் எல்லாமே திருவேங்கடச் செல்வனே என்று கூறி திருமலையினின்றும் திரும்பிச் செல்ல வருந்தினார். அந்த வைணவரும் விடாமல் பல உபதேசங்களைச் செய்து அங்கிருந்து அனுப்பி வைத்தார். திவ்யப்ரபந்தங்களைப் பாடிக்கொண்டும் பல திவ்யதேசங்களைக் கடந்து சேங்கனூர் அருகில் வந்து சேர்ந்து, அங்குள்ள கொள்ளிடக் கரையில் சாளக்ராம ரூபனை விஷ்ணுவை வைத்துவிட்டு, விதிப்படி தீர்த்தமாடிவிட்டு திரும்ப வந்து பார்க்க, பகவானது சாளக்கிராமம் மறைந்து விட்டது.

மிகவும் வேதனையுடன் சேங்கனூர் அடைந்து பெற்றோர்களைக் கண்டு வணங்கி, நடந்த சகல விபரங்களையும் கூறி வருந்தினார். சில நாட்களில் பகவான் மீது பீடிக்கப்பட்ட தாபம் உடையவராதலால், ஊன் உறக்கமின்றி மிகவும் புலம்பினார். கருணைக் கடலான இறைவன் அவர் கனவில் தோன்றி அங்கேயே காவிரிக் கரையில் தனது இருப்பிடத்தை அறியப்படுத்தினார். ஸ்ரீக்ருஷ்ண ஸூரியும் அவரது அடியவர்களும், காவிரியில் க்ருஷ்ணனைத் தேடினார். அங்கு பேரானந்தம் தருபவனும், அர்ச்சாரூபியாய் திருவேங்கடச் செல்வனும் காணப்பட்டார். அந்த பெருமானை அங்கிருந்து எழுந்தருளச் செய்து, சிறந்த கோவிலை நிர்மாணித்து பிரதிஷ்டை செய்தார்.

க்ருஷ்ணஸூரி அங்கேயே நிலையாகத் தங்கி தன்னை ஆட்கொண்ட பக்தவத்ஸலனை நாளும் ஆராதித்து அவனது புகழ்பாடும் வேத இதிகாச ரஹஸ்யங்களுக்கும், தமிழ் வேதமாகிய திவ்யபிரபந்தத்திற்கும், வால்மீகி இராமாயணத்திற்கும் அரிய உரை எழுதி பெரும்புகழ் பெற்றார். வைணவத்தை இன்றளவும் பொலிவும் வலிவுமாக விளங்க வைத்த பெருமை அவரையே சாரும். அவரில்லாவிட்டால் வைணவ உலகம் இன்று திக்குதிசை அறியாமல் அந்தகாரத்தில் தத்தளித்துக் கொண்டிருக்கும். இதனை,

"பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ள வைக்கும்
தெரிய வியாக்கியைகள் செய்வால்- அரிய
அருளிச் செயற்பொருளை ஆரியர்கட்கிப் போது
அருளிச் செயலாய்த் தறிந்து." என்ற

தொடர்களால் அறியலாம்.

இவர் இயற்றியுள்ள க்ரந்தங்கள்: திருவாய்மொழி வ்யாக்யானம், இருபத்து நாலாயிரம், மற்ற ப்ரபந்தங்களுக்கு வ்யாக்யானங்கள், பரந்தரஹஸ்ய விவரணம், மாணிக்க மாலை, நவரத்ன மாலை, ஸகல ப்ரமாண தாத்பர்யம், உபகாரரத்னம், கத்யத்ரய வியாக்யானம், ஆளவந்தார் ஸ்தோத்ர வ்யாக்யானம், அபயப்ரதான வ்யாக்யானம், சரமரஹஸ்யம், அநுஸந்தான ரஹஸ்யம் ஆகியவை.

(அடுத்த பக்கம் பார்க்க)

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

'' அலங்கு கதிர்க்கனவி நால் வயிற்
றேன்றினும்
இலங்கு கதிர்வெள்ளி தென்புலன்
படரினும்
அந்தண் காவிரி வந்து கவர்பு ஊட்ட''

என்று.

அத்தகைய காவிரி சோழ நாட்டை வளப்படுத்திக் கொண்டு வரும் பொழுது தஞ்சை நகரை ஒதுக்கி திருவையாற்றை யடைந்து, ஐயாரப்பன் கருணை வெள்ளமாக ஓடுகிறாள். திருவையாற்றைப் பாடி பரவசமாகும் திருஞான சம்பந்தப் பெருமான்,

'' கடலேறித் திரை மோதிக் காவிரியின்
உடன் வந்து கங்குல் வைகித்
திடலேறிச் சுரிசங்கம்செழுமுத்து அங்கு
ஈன்று அலைக்கும் திருவையாறே''

'' செண்டாடு புனல் பொன்னி செழு
மணிகள்
வந்தலைக்கும் திருவையாறே''

என்று கூறுகிறார். மேலும் திருநாவுக்கரசர்,

'' என்னுனைக் கன்றினை என் ஈசன்
தன்னை யெறி நீர்த்திரை யுகளும்
காவிரி சூழ்
தென்னுனைக் காவானைத் தேனைப்
பாலைச்
செழுநீர்த் திரளைச் சென்றாடினேனே'

என்று கூறி ஆடிப்பாடி மகிழ்கிறார்.

திருமங்கை மன்னன்,

'' சந்திரனோடு மணியும் கொழிக்கும்
புனர்காவிரி''

என்று புகழ்ந்து பாடியுள்ளார்.

பெருமிதத்தோடு பாடுகிறார் பெரியாழ்வார்:

'' தழுப்பரிய சந்தனங்கள் தடவரைவா
யீர்த்துக் கொண்டு
தெழிப்புடைய காவிரி வந்து அடி
தொழும்
சீரங்கம்'' என்று.

தொண்டரடிப் பொடியாழ்வார், காவிரியை கங்கையை விட புனிதமானது என்பதை ''திருமாலை'' என்னும் பிரபந்தத்தில் ''கங்கையிற் புனித மாய காவிரி'' என்று மிகவும் துணிச்சலாகக் கூறுகிறார். சமயக் குரவர்களும், கவிஞர்களும், புராணங்களும் போற்றிப் புகழ்ந்துரைக்கும் காவிரியை தமிழ் நாட்டார் போற்றும் முறைச் சாலச் சிறந்தது. தமிழ் நாட்டில் மற்றெந்த நதியின் பெயரைத் தமிழ் தம் மக்கட்குச் சூட்டக் காணேம். ஆனால் ''காவேரி'' என்ற பெயரைத் தமிழ் பெண் மக்கள் வைத்துக் கொண்டுள்ளதைப் பார்க்கிறோம். மேலும் நாம் எதை வாழ்த்தினாலும் ''கல்லும் காவேரியும் உள்ளவரை'' என்று வாழ்த்துதலைப் பார்த்துள்ளோம். காவேரிக்கு ''பொன்னி'' என்ற பெயர் வழங்கி வந்துள்ளது. காவேரியின் தண்ணீரில் பொன் சத்து இருக்கிறது என்பது ஆராய்ச்சியாளரின் கூற்று. இன்னும் காவேரி நீர் பாயும் வயல்கள் பொன் நிறைந்த நெற்பயிர்களை விளைவிக்கவில்லையா? ஆகையாலே ''பொன்னி'' என்று சொல்வதும் மிகமிகப்பொருத்தமே. பெரியார்களும், அடியார்களும், அறிஞர்களும், கவிஞர்களும் காவிரி நதிக்கரையில் உள்ள இடங்களில் வசித்து வந்தார்கள். இன்று கர்னாடக சங்கீதம் ஓங்கி வளர்ந்துள்ளதற்குக் காரணமான ஸ்ரீ தியாக ராஜ ஸ்வாமிகள் காவேரிக் கரையில் குடிகொண்டு கானமுத மழைபெய்தார், பெய்து கொண்டிருக்கிறார்!

பல திவ்ய க்ஷேத்ரங்கள் காவிரி நதிக் கரையில்தான் விளங்கி சரித்திர முக்யத்வம் பெற்று வருகிறது. அத்தகைய காவிரியை நாட்டுத் தாயாக நினைத்து வழிபடும் நாளே ''பதினெட்டாம் பெருக்கு'' என்ற நாளாகும். இவ்விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடுவது சோழ நாடேயாகும்.

பெண்களுக்குப் பதினெட்டு வயதானால் அப்பெண் பருவமடைந்துவிட்டால் நம் வீடுகளில் பெண்களுக்கு அணிகலன் யாவையும் அணிவித்துப் பல பெண்களுடனும் சேர்ந்து ஆடிப்பாடி உண்டு மகிழ்வதைக் காணலாம். அதே போல் காவிரிப்பெண் பதினெட்டாம் பெருக்கன்று பருவமடைந்துள்ளாள்; இனி நமக்குக் கவலையில்லை என்ற மகிழ்ச்சியைத் தெரியப்படுத்தவே அவ்விழாவினைக் கொண்டாடுகிறோம். இன்றும் ஆடிமாத முதன் மூன்று நாட்கள் யாரும் ஸ்நானம் செய்வதில்லை. அன்று காலை சிறுவர்கள் தேர்செய்து இழுத்துச்சென்றும், நங்கையர் திருமாவிளக்கு போட்டும் காவேரி அன்னையைப் போற்றி வழிபடுகிறார்கள். மாலையில் சித்ரான்னம் செய்து புத்தாடை அணிந்து காவேரி கரைக்குச் சென்று காவேரியின் பிரவாஹத்தில் நின்று உண்டு மகிழ்ச்சியடைவார்கள். காவேரி சோழ நாட்டில் மட்டும் ஓடினாலும் தமிழ் நாட்டிற்கே உரியவள். காவேரியின் தண்ணீரைப் பருகினாலே குரலில் இனிமையும், மென்மையும் உண்டாகும். காவேரிக் கரையிலே எத்தனையோ கானங்கள் கேட்டுக் கொண்டிருக்கின்றன. தொடரட்டும் அத்தேவ கானம்!



(முன் பக்கத் தொடர்ச்சி)

ஸ்ரீக்ருஷ்ணஸூரி நாளும் வணங்கி வந்த பரந்தாமன் தனது பக்தர் பெரியவாய் அச்சான் பிள்ளை என்றும், வ்யாக்யான சக்கரவர்த்தி என்றும் க்ருஷ்ணஸூரி மூலம் தமிழ் மறையினை பாமரர்க்கும் கிட்டும் சாதனமாகச் செய்து விட்டான். அவனையடைய நம்போன்று ஸம்சார சாகரத்தில் உழலும் சேதனர்க்கு பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளை விட சரணம் வேறுமற்றென்றில்லை.

பெரியவாச்சான் பிள்ளையால் இந்த வையகமே உஜ்ஜீவனம் பெற்றிருக்கிறது. காவிரி கண்ட ஞான ஸூரியனாகிய இவர் அவதாரஸ்தலமாகிய ஸ்ரீ சேங்கனூரில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ வெங்கடாஜலபதியின் கோயில் அனைவரையும் கவரும் வண்ணம் திகழ்கிறது.



# காவிரியும் அதன் மகிமையும்

அகஸ்திய மகரிஷி காவேரியைப் பார்த்துக் கூறுகிறார் — "ஹே காவேரி, இந்த மலைக்குப் பிரம்மகிரி என்று பெயர். இங்கிருந்துதான் நீ நதிரூபமாகக் கிளம்பப் போகிறாய் என்று முந்தியே பிரம்மா சொல்லியிருக்கிறார். ஆகையால் என் குடத்தில் இருக்கும் புண்ணிய தீர்த்தங்களுடன் சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டு கொஞ்ச காலம் இருந்தாலும் உன் இஷ்டம் நிறைவேறும்" என்று அவளுக்கு அறிவித்து, அருகிலிருக்கும் சீடர்களைக் கூவி அகஸ்தியர், "நான் சுவர்ணமுகி நதியில் ஸ்நானம் முதலிய அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு . சீக்கிரம் வந்து சேருகிறேன். நான் வருகிறவரையில் இதோ இருக்கும் புண்ணிய தீர்த்தங்களால் விளங்கும் குடத்தை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ள வேண்டும்" என்று உத்தரவிட்டு, நதிக்கு ஸ்நானத்துக்குச் சென்றார். இவ்விதம் சிஷ்யர்களிடம் ஒப்பித்து விட்டுத் தன் பர்த்தா ஸ்நானத்துக்குச் சென்ற பிறகு காவேரி, 'எப்பொழுது நாம் வெளியில் சென்று லோகங்களை ரக்ஷிக்கப் போகிறோம்? எவ்வளவு காலம் இருந்தாலும் கும்பஸம்பவர் திருப்தியாக அநுமதி அளிக்கமாட்டாரென்று தோன்றுகிறது. இவ்விடம் வருவதற்கு முன், "ஸஹ்யபர்வதம் போனவுடன் நீ நதீரூபமாகத் தக்ஷிணதிக்கை அடையலாம்" என்று சொல்லியிருந்தும், இங்கு வந்த பிறகு சமயத்தை எதிர்பார்க்கும்படி சொல்லுகிறார். நாம் என்ன செய்வது?" என்று யோசித்தாள். ஆனால், 'முன்பு பிரதிக்ஞை செய்யப்பட்ட சமயம் வந்து விட்டது. நாம் கிளம்பிப் போனாலும் தோஷமில்லை' என்று நினைத்துக்கொண்டு ஒரு முகூர்த்த காலம் தியானத்தில் இருந்தாள்.

இந்தச் சமயத்தில், தனக்கு இருப்பிடமான சதுர்முகன் லோகத்தை ரக்ஷிக்கவேண்டி, மற்றுமுள்ள தேவர்களுடன் ஸஞ்சாரம் செய்கையில் அநேக புண்ணிய தீர்த்தங்களுடன் பிரகாசிக்கும் பிரம்மகிரி என்ற ஸஹ்ய பர்வதத்தைக் கண்ணுற்றார். பல வகைகளான விருக்ஷங்களாலும் கொடிகளாலும் பழங்களாலும் புஷ்பங்களாலும் மிகவும் சிறப்பாக விளங்கும் தேஜோமயமாக இருக்கும் அந்த மலையில் தளிர்த்த இலைகளோடும் நன்கு பழுத்த பழங்களோடும் ஓங்கி விரிந்து வளர்ந்திருக்கும் நெல்லி மரத்தைப் பார்த்து மிகவும் சந்தோஷமடைந்து, அதனால் இழுக்கப்பட்ட வராகச் சமீபத்தில் சென்று, 'இவ்விதம் நம்மை இது செய்வதற்கு யாது காரணம்?' என்று தெரிந்து கொள்ளும் பொருட்டு ஸமாதியில் இருந்து தியானம் செய்தார். உடனே அவரது சித்தத்தில் அந்த நெல்லி மரத்தில் சங்கம் சக்கரம் முதலிய ஆயுதங்களால் அலங்கரிக்கப் பெற்ற நான்கு புஜங்களுடன் ஸ்ரீ விஷ்ணு பரமாத்மாவும் பிரகாசித்தார். உடனே அந்த நெல்லி மரத்தை ஸாக்ஷாத் ஸ்ரீ நாராயண ஸ்வரூபமாக அறிந்து பத்மஜர் தண்டம்போல் நமஸ்காரம் செய்தார். அந்த க்ஷணமே, "ஸ்ரீ வைகுண்டவாஸியாகிய லக்ஷ்மீபதி ஸ்வரூபமான இந்த மரத்தை நீர் பூஜை செய்யும். அவ்விதம் செய்தால் உம்முடைய ஸ்தானம் உமக்கே நிலை பெறும்" என்று கூறிய அசரீரி வாக்கைக் கேட்டு, 'இந்த நெல்லி மரத்துக்கு இவ்வளவு மகிமை இருக்கிறதா!' என்று புளகாங்கிதராக, அந்த ஆமலக விருக்ஷத்தைப் பிரதக்ஷிணபூர்வகமாக நமஸ்கரித்து உயர்ந்த புஷ்பங்களாலும் திவ்ய கந்தங்களாலும் நன்கு அர்ச்சித்துத் தம் குடத்திலுள்ள ஸர்வ புண்ணிய தீர்த்த ஸ்வரூபமாக விளங்கும் விரஜா நதியின் தீர்த்தத்தை, காயத்ரீரூபமான சங்கத்தால் மிகுந்த பக்தியுடன் அபிஷேகம் செய்தார்.

அப்பொழுது காவேரியை நோக்கி ஆகாயவாணி உன் கூறிற்று — அஃதாவது, "அம்மா காவேரி, உன் மனோரதம் இப்பொழுதுதான் ஸபலமாகப் போகிறது. நீ மகோததியை அடைவதற்கு சமயமும் கிட்டிற்று. உனக்குத் தக்ஷிண கங்கை என்ற பெயர் பிரசித்தமாகப் போகிறது. ருதுக்களுக்குள் முக்தியை அடைவதற்கு மிகவும் முக்கிய காலமான சரத் காலம் நேர்ந்திருக்கிறது. இந்தச் சமயத்தில் அற்பமான தர்மத்தைச் செய்தாலும் அளவிறந்த பலனைக் கொடுக்கும். உன் தபோவிசேஷத்தால் துலா மாஸ ஸங்கிரமணமும் வந்து விட்டது. பரிசுத்தமான இந்த ஸஹ்ய பர்வதத்திலிருக்கும் விஷ்ணு ஸ்வரூபமான ஆமலகத்தின் பாதத்தில் பிரம்மாவால் விரஜா நதி முதலிய புண்ணிய தீர்த்தங்களால் நிரம்பிய தம் குடத்திலிருந்து காயத்ரீ ஸ்வரூபமான சங்கத்தால்

அபிஷேகம் செய்யப்பெற்ற தீர்த்தம் விஷ்ணு பாதங்களினின்று ஓடுகிறது. இந்தப் புண்ணிய தீர்த்தத்துடன் நீயும் சேர்ந்து போனால் லோகத்திற்கு மிகவும் உபகாரம் செய்யலாம்'' என்று கூறியது.

இந்த வசனத்தைக் கேட்ட காவேரி அதிக சந்தோஷம் கொண்டு தன்னுடன் குடத்தில் இருந்த புண்ணிய தீர்த்தங்களைப் பார்த்து, "நீங்கள் ஆகாச வாக்கைக் கேட்டீர்களா? நான் விஷ்ணு பாத தீர்த்தத்துடன் தக்ஷிண திக்கை ரக்ஷிப்பதற்காகப் போகிறேன். உங்களுக்கும் திருப்தி இருந்தால் வாருங்கள்'' என்று சொன்ன வார்த்தையைக் கேட்டு, மற்றத் தீர்த்தங்கள் "நாங்களும் கூடவே வருகிறோம்'' என்று சொல்லவே, ஆனந்தம் உண்டாயிற்று.

உடனே பிரம்மாவினால் ஏவப்பட்ட நல்ல வாசனையுடன் கூடிய குளிர்ந்த பெருங் காற்று வீசத் தொடங்கிற்று. இந்திரனுடைய கட்டளையினால் மேகங்கள் நான்கு பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு அற்பமாக வருஷிக்க ஆரம்பித்தன. இந்தச் சமயத்தில் அகஸ்தியரால் தம் கமண்டலுவை ரக்ஷிப்பதற்காக வைக்கப்பட்டிருந்த சீடர்கள் அனைவரும் பெருங்காற்றுக்கும் மழைக்கும் பயந்து, அந்த இடத்தை விட்டு ஒரு மரத்தடியிற் சென்று விட்டார்கள். அப்பொழுது வீசின பெருங்காற்றில் காவேரி முதலிய புண்ணிய தீர்த்தங்களால் நிரம்பிய அகஸ்திய முனியின் குடம் பூமியில் சாய்க்கப்பட்டது. அவ்விதம் சாய்ந்த குடத்திலிருந்து காவேரி, 'வெகு காலமாக நாம் எதிர்பார்த்துக்கொண்டிருந்த சமயம் இப்பொழுதுதான் கிடைத்தது' என்று லோகோபகாரத்தில் தனக்கு இயற்கையாக இருக்கும் கருணையால் மிகுந்த உத்ஸாகத்தால் தன்னுடன் இருந்த புண்ணிய தீர்த்தங்களுடனும் பிரம்மாவால் தன் காயத்ரீ ரூப சங்கத்தால் நெல்லிமர ரூபமாக விளங்கும் ஸ்ரீ விஷ்ணுவினுடைய சரண கமலத்தில் அபிஷேகம் செய்யப்பெற்று அதிலிருந்து பெருகி வருகிற விரஜை முதலிய புண்ணிய நதிகளின் தீர்த்தத்துடனும் அந்த ஸஹ்ய பர்வதத்திலிருந்து அதிக நுரைகளாலும் குமிழிகளாலும் சுழல்களாலும் அலங்கரிக்கப் பெற்றவளாகத் தக்ஷிண திக்கில் சென்றாள்.

ஸஹ்ய பர்வதத்திலிருந்து வெளியில் வர ஆரம்பித்ததனால் 'ஸஹ்யஜா' என்ற காரணப் பெயரும் இவளுக்கு வாய்த்தது. ஸ்நானத்துக்குப் போன அகஸ்தியர் சீக்கிரம் திரும்பி வந்து தமது குடத்தைப் பார்த்தபோது அது சாய்ந்து காவேரி வெளியில் போயிருப்பதையும் கண்டு அதிக கோபங்கொண்டு, தம் ஸமீபத்தில் வந்து மிகுந்த பயத்துடன் நின்ற சீடர்களைப் பார்த்து, "நான் வருகிற பரியந்தம் காவேரியை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னபடி சரியாக நீங்கள் ஏன் நடத்தவில்லை?'' என்று கேட்டார். அவர்கள் நமது குருவின் சாபத்திற்கு உள்ளாகாமலிருக்க வேண்டுமே என்ற கவலை கொண்டு, நடந்ததை அறிவித்து, ஒரு பெருங் காற்றால் இவ்விதம் நேர்ந்ததென்றும் கூறினர். பிறகு, "நாங்களும் ஓடிப்போய் எங்கள் குரு வருகிற வரையில் இருந்துவிட்டுப் பிறகுதான் போக வேண்டும். இல்லாவிட்டால் நாங்கள் அபராதிகளாகி விடுவோம்'' என்று பலவாறாகப் பிரார்த்தித்தபோது காவேரி கூறியதாவது—"இவ்விடம் வருவதற்கு முந்தியே பிரம்மாவினாலும் இவராலும் இங்கு வந்தவுடன் இவ்விதம் போகலாமென்று என் அபிப்பிராயத்தை அநுஸரித்து அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. மகரிஷியின் அநுமதியின் பேரில்தான் நான் போகிறேன். இது அவருக்கும் நன்றாகத் தெரியும். நீங்கள் கவலைப் பட வேண்டாம். உங்களுக்கு குருவால் யாதொரு சிக்ஷையும் ஏற்படாது'' என்று காவேரியம்மன் சொன்ன வார்த்தைகளை உண்மையாக நம்பித் தாங்கள் திரும்பி வந்துவிட்டதை சிஷ்யர்கள் தெரிவித்தார்கள்.

---

உடனே முனிவர் கோபம் தணிந்து, சந்தோஷமாகக் காவேரியைப் பார்க்க வேண்டுமென்று வேகமாய்ச் சென்று அவளருகிற் போனவுடன், பக்தி விசுவாசத்துடன் அவள் வந்து நின்றதைக் கண்டு, "ஏன் நான் இல்லாத சமயத்தில் புறப்பட்டு வந்தாய்?'' என்று வினவினர். "நான் முந்தியே தங்களிடமிருந்தும் பிரம்மாவினிடமிருந்தும் வாங்கியிருக்கும் சம்மதியைக் கொண்டு விஷ்ணு ஸ்வரூபமான நெல்லி மரத்தின் அடியிலிருந்து கிளம்பும் விரஜை முதலிய புண்ணிய நதியின் சேர்க்கையும் நேர்ந்தபடியால் சீக்கிரமாக லோகோபகாரம் செய்ய வேண்டுமென்ற என் கோரிக்கையை நிறைவேற்ற வேண்டி, முன் அறிவித்திருப்பதே போதுமென்ற எண்ணத்துடன் வந்தேனேயன்றி வேறு வித்தியாசமில்லை'' என்று காவேரி சொன்ன வார்த்தையைக் கேட்டு மிகுந்த சந்தோஷத்துடன் அவளைப் பலவாருகப் போற்றி, "உன்னால் தக்ஷிண தேசத்திற்கு ஏற்பட்ட பாக்கியத்தை யாரால்தான் கூற முடியும்?'' என்று இத் தேசத்தைப் பற்றியும் புகழ்ந்து பேசி, பிறகு காவேரி விஷயமாகத் தம் உள்ளத்திலிருக்கும் ரகசியமான சமாசாரத்தையும் அவளுக்கு அறிவிக்கும் வண்ணம் அவளை ஸம்போதனம் செய்து, "பின்னும் அதிக ரகசியமான ஒரு ஸமாசாரத்தையும் உனக்குத் தெரிவிக்கிறேன், கேள்'' என்று கூறத் தொடங்கினர்:—

महारहस्यं किञ्चात्र शृणुष्वात्यद्भुतं शुभे ।
ब्रवीमि दिव्यदृष्ट्याद्य सर्वशास्त्रेषु निश्चितम् ॥

மஹாரஹஸ்யம் கிஞ்சாத்ர ச்ருணுஷ்
வாத்யத்புதம் ஶுபே |
ப்ரவீமி திவ்யத்ருஷ்ட்யாத்ய ஸர்வ
சாஸ்த்ரேஷு நிஸ்சிதம் ॥

महापातकिनां पापं मोचयन्त्यः क्षणेन हि ।
गङ्गादिका महानद्यस्तीर्थानि च महान्ति च ॥

மஹாபாதகிநாம் பாபம் மோசயந்த்யః
க்ஷணே ந ஹி ।
கங்காதிகா மஹா நத்யஸ் தீர்த்தாநி
ச மஹாந்தி ச ॥

मलीकृताश्च तत्पापैरशक्तास्तद्विमोचने ।
शोचयन्त्यः परं देवं यान्ति लोकपितामहम् ॥

மலீக்ருதாஸ்ச தத்பாபைரஸக்தாஸ்
தத்விமோசநே ।
ஶோசயந்த்யः பரம் தேவம் யாந்தி
லோகபிதாமஹம் ॥

तासां विशुद्धये ब्रह्मा सभायां मुनिभिः सह ।
सम्यग्विचार्य शास्त्रेषु वेदेषु च पुनः पुनः ॥

தாஸாம் விஶுத்தயே ப்ரஹ்மா
ஸபாயாம் முநிபிः ஸஹ
ஸம்யக் விசார்ய சாஸ்த்ரேஷு
வேதேஷு ச புநः புநः ।

हरिणा च ततः प्रोक्तं प्रायश्चित्तं विधास्यता ।
स्नास्यन्तु सह्यधात्र्यग्रे कावेर्यां तौलिसङ्गमे ॥

ஹரிணா ச ததः ப்ரோக்தம் ப்ராயஸ்
சித்தம் விதாஸ்யதா
ஸ்நாஸ்யந்து ஸஹ்யதாத்ர்யக்ரே
காவேர்யாம் தௌலிஸங்கமே ॥

"யோக திருஷ்டியால் ஸமஸ்த சாஸ்திரங்களாலும் நிர்மானிக்கப்பட்ட விஷயத்தை அறிந்து சொல்லுகிறேன். எவ்வித மகாபாவிகளுடைய பாவங்களையும் க்ஷண காலத்தில் நிவிருத்தி செய்து கொண்டு வரும் கங்கை முதலிய நதிகளும் மற்றுமுள்ள புண்ணிய தீர்த்தங்களும் தங்களிடத்தில் அடிக்கடி வந்து சேரும் பாவங்களை விலக்கத் தங்களுக்குச் சக்தி இல்லாததனல்

துக்கமடைந்து, இந்தப் பாவத்தைப் போக்கடிக்க வேண்டிச் சதுர்முகனைச் சரணமடைந்தன. இவற்றின் பாவத்தை எவ்விதம் விலக்கலாமென்று தீர்மானிக்க வேண்டித் தன்னுடைய ஸபையில் முனிகளுடன் சாஸ்திரார்த்தங்களையும் வேதார்த்தங்களையும் நன்கு விசாரித்து, முடிவில் விஷ்ணு பரமாத்மாவால் ஸஹ்யபர்வதத்தில் விளங்கும் நெல்லி மரத்திற்கு முன்னிலையில் துலாஸங்கிரமண காலத்தில் காவேரியில் ஸ்நானம் செய்தால் இவர்களின் பாவம் நீங்குமென்று, கங்கை முதலிய தீர்த்தங்களின் பாவங்கள் கூட உன் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதனுல் விலகிவிடுமென்று பிராயச்சித்தமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் உன்னுடைய புண்ணிய தீர்த்த மகிமையையும் பெருமையையும் இவ்விதமென்று யாரால் கூற முடியும்?'' என்று நிருபித்து, இவ்வித மகிமையால் பிரகாசிக்கிறவளாயும், லோகோபகாரத்தில் அதிக ஆவல் கொண்ட நீ தக்ஷிண தேசத்தில் விளங்கும் பிராணிகளுக்கு ஐசுவர்யம் க்ஷேமம் விஜயம் முதலிய சிரேயஸ்ஸையும் உண்டுபண்ணும் பொருட்டு யாதோர் இடையூறுமின்றிச் சுகமாகப் போ என்று என்னுலும் அநுமதி கொடுக்கப்பட்டாய்.''

विभूत्यै दाक्षिणात्यानां क्षेमाय विजयाय च ।
मया चैवाभ्यनुज्ञाता गच्छ देवि यथासुखम् ॥

விபூத்யை தாக்ஷிணாத்யாநாம்
க்ஷேமாய விஜயாய ச ।
மயா சைவாப்யநுஜ்ஞாதா கச்ச
தேவி யதாஸுகம் ॥

அகஸ்திய முனிவர் இப்படிக் காவேரியை ஆசீர்வதித்துத் தமது ஆசிரமத்துக்கு ஏகினுர். பிறகு காவேரி அகஸ்திய மகரிஷியின் பிரியமான ஆசீர்வாதத்தால் அதிக உத்ஸாகத்துடன் கிராமம் கிராமமாகச் சமுத்திரம் வரையிற் சென்று, உற்பத்தி ஸ்தானம் முதல் சமுத்திர சங்கமம் வரையில் தன் தீரங்களிலுள்ளவர்களையும், தேசாந்தரங்களிலிருந்து வந்து ஸ்நானம் முதலியவற்றைச் செய்யும் எல்லாப் பிராணிகளையும் நன்கு பரிசுத்தம் செய்து வருகிறுள். ஆகையால் இவ்வுலகத்தில் பற்பல தேசங்கள் இருந்தாலும் அவற்றுக்குச் செல்ல விருப்பமின்றி நம் முன்னேர்கள் செய்த புண்ணிய கர்மத்தாலோ நம் போன்ற ஜனங்களின் அதிர்ஷ்ட விசேஷத்தாலோ அல்லது காவேரிக்கு இயற்கையில் இந்தத் தேசத்திலுண்டான கருணையாலோ யாதொரு பயனையும் எதிர்பாராமல் அற்பமேனும் சிரமமின்றி நம்மையும் நம் பித்ருக்களையும் நமது சந்ததிகளையும் மற்றுமுள்ள பிராணிகளையும் கிருதார்த்தர்களாகச் செய்ய வேண்டுமெனக் கருதியே இந்தத் தென்திசையை அலங்கரிக்கிறுள் என்பது திண்ணம்.

இவ்விதம் இருக்கும் கருணைக் கடலான காவேரி தேவியின் உற்பத்திக் கிரமத்தையும், அவளது வைபவத்தையும், லோகரக்ஷணத்தில் அவளுக்கு இருக்கும் பிரீதி விசேஷத்தையும், கலியில் முக்தி பெற இவளைத் தவிர வேறு சுலபமான நெறி கிடைப்பது அரிது என்பதையும் நன்கு உணர்ந்து அவரவர் ஒவ்வொரு தினமும் சாஸ்திரங்களில் கூறியவாறு காவேரியை அடைந்து ஸ்நானம் பானம் தர்ப்பணம் ஜபம் முதலிய ஸத்கர்மாநுஷ்டானங்களைச் செய்து, சம்சாரத்திலிருந்து விலகி மோக்ஷமென்ற பரம புருஷார்த்தத்தை அடைய வேண்டுமென்று பிரார்த்திக்கிறேம்.

நன்றி: ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்

16-ம் பக்கத் தொடர்ச்சி

காலம் கடந்துகொண்டிருந்தது. அவர் எதிரே ஒரு சிறுவன் வருவது தெரிந்தது. அவனை அழைத்து, கமண்டலத்தை அவனிடம் கொடுத்து அதை பாதுகாப்பாக வைத்திருக்கும்படியும், கீழே வைக்கக்கூடாது என்றும் சொல்லி விட்டுச் சென்றுர். அவர் வருவதற்கு சற்று தாமதமாயிற்று. அச்சிறுவன் கமண்டலத்தை கீழே வைத்து, உருட்டி விட்டான். காவிரியாள் சுதந்திரம் பெற்றவள் போல துள்ளிக் குதித்துக் கிழக்கு நோக்கி பாய்ந்தோடினுள். இதனைக்கண்ட அகத்திய முனியர் விரைந்து வந்தார். அதற்குள் சிறுவன் ஓடி விட்டான். அவனைத் தேடி அவரும் விரைந்தார். அங்குள்ள கோவிலில் அச்சிறுவன் நுழைவதைக் கண்டார். அவனைப் பின் தொடர்ந்தார். சிவனுர் உறையும் இடத்துள் அவன் நுழைவதைக் கண்டார். அவனைப் பிடிக்க முடியும் போது சிவனுர், 'கமண்டலத்தைதங்களிடம் இருந்து பெற்று கவிழ்த்து விட்டவன் என் மூத்த குமாரன் விநாயகன்' என்று கூறி அம்முனிவருக்குக் காட்சி யளித்தார்.

கமண்டலத்தில் அடைப்பட்டிருக்கும் காவிரியை உலகத்திற்கு உதவச் செய்யவும், காவிரியினை கிழக்கே செல்ல வழி செய்யவும், சிவனவர் தம் முதல் குமாரன் விநாயகனை சிறுவனுக அனுப்பினதை உணர்ந்த அகத்தியர், சிவனை வணங்கி பின்னர்தென் திசை நோக்கிப் பயணம் செய்தார். தெற்கு நோக்கிப் பாய்ந்து வரும் காவிரி கிழக்கு நோக்கி திரும்பிச் செல்லும் காட்சியினைக் கண்ணுறும் போது இக்கதையின் உட் புனிதம் விளங்கும். தெற்கு நோக்கி வந்த காவிரியை மலையோ, மேடோ, பள்ளமோ, மடுவோ எதுவும் குறுக்கிட்டுத் திசையை மாற்றுமல் தாமாகவே கிழக்கு நோக்கிச் செல்லும் காட்சி ஒரு அரிய காட்சியாகும். காண்போர் சிந்தித்து வியக்கும் காட்சியாகும். இத்தகைய காட்சியினை ஈரோட்டிற்குத் தெற்கே இருபத்து ஐந்து மைல்கள் தொலைவில் உள்ள கொடுமுடியில் காணலாம். அங்குள்ள கோவிலில் ஒரே இடத்தில் அருகராக சிவன், பிரம்மா, விஷ்ணு (ரங்கநாதர்) ஆகிய மும்மூர்த்திகளின் ஆலயங்கள் உள்ளன. இது அழகிய சிற்ப வேலைகளும், அருமையான அமைப்பும் கொண்ட ஆலயம் ஆகும்.

பாரதப் பண்பாட்டிற்கும், செழிப்புக்கும், சிந்தனைக்கும், உறைவிடங்களாகவும், புண்ணியத்தலங்களின் பிறப்பிடங்களாகவும் திகழும்காவிரியின் சிறப்பினையும், அழகினையும், ஒஹேனக்கல்லிலும், முக்கூடல் பவானியிலும், கொடு முடியிலும் நேரில் சென்று உணர்வதும், அநுபவிப்பதும் மிகவும் பயனுள்ளதும், புனிதமானதும் ஆகும். ★

# வாழி காவிரி

டாக்டர். பொன். சௌரிராஜன்

அன்பையும், பண்பையும், அறிவையும், ஆற்றலையும் பெண்மைத் தெய்வங்களாகப் போற்றி வணங்கி, வாழ்த்தி வந்த நிலம் இந்த இந்தியப் பெருநிலம். அன்போடு, ஆதரவோடு உயிர்களையும், பயிர்களையும் உண்பித்து வாழச் செய்யும் ஆற்றையும், ஊற்றையும் பெண்ணாகக்கண்டு தாயாகக் கொண்டு வாழ்ந்து வருவோர் இந்திய மக்கள்.

இந்த இந்தியப் பண்பாடு இன்று தமிழகத்தையும் ஆட்கொண்டு விளங்கி வருதலைக் காணலாம். ஆடிமாதம் 18-ம் நாள் காவிரிக் கரையில் வாழும் மக்களெல்லாம் காதோலை கருமணியும், பூவும் புகையுமிட்டுக் காவிரித் தாயை வணங்குதல் இன்றும் காணலாம்.

இந்தக்காவிரியாறு சோழநாட்டை வறட்சியிலிருந்து காத்து வளம் வழங்கும் வள்ளலாகத் திகழ்ந்த பான்மையைச் சங்கச் சான்றோர் பாடிப் புகழ்ந்துள்ளனர். மழை மறந்த காலத்தும், நிலம் வறண்ட காலத்தும் குறிஞ்சிக் குன்றுகளிலும், முல்லைக் காட்டிலும் தோன்றி வளர்கின்ற மணங்கமழ்கின்ற செடி கொடிகளை, மரம் மட்டைகளை உருட்டிக்கொண்டு சோழ நாட்டுத் துறைகளெல்லாம் சென்று ஊரையெல்லாம் ஊட்டிக் காக்கின்ற காவிரியின் திறத்தை முடத்தாமக் கண்ணியார் பின்வருமாறு பாடுகிறார்.

கருவி வானம் கடற்கோள் மறப்பவும்,
பெரு வறன் ஆகிய பண்புஇல்
காலையும்—
நறையும் நரந்தமும் அகிலும்ஆரமும்,
துறைதுறைதோறும், பொறை
உயிர்த்து ஒழுகி,
..............................
ஆயிரம் விளையுட்டு ஆக,
காவிரி புரக்கும் நாடு.

*பொருநர் ஆற்றுப்படை : 235-248.*

வானத்து மீன்களும், கோள்களும் திசைமாறினாலும் வானநீரை உண்டு உயிர் வாழ்கின்ற வானம்பாடிகள் வருந்துமாறு மழை பெய்யாத காலத்தும் பொய்யாது சோழநாட்டு வளத்தினை வளர்த்துவரும் காவிரி என்று கடியலூர் உருத்திரங் கண்ணனார் பின்வரும் பட்டினப் பாலை அடிகளில் குறிப்பிடுகின்றார்.

வசை இல் புகழ், வயங்கு வெண் மீன்
திசை திரிந்து தெற்கு ஏகினும்,
தற்பாடிய தளி உணவின்
புள் தேம்பப் புயல் மாறி,
வான் பொய்ப்பினும், தான்பொய்யா,
மலைத் தலைய கடற் காவிரி.

*பட்டினப்பாலை 1-6*

சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய சிலப்பதிகாரத்தில் காவிரியாறு பெண்ணாகவும், தாயாகவும் போற்றிப் பேசப் பெறுகின்றது. சோழ நாட்டு உழவர்களையெல்லாம், பரப்பு நீர்க் காவிரிபாவை தன் புதல்வராகக் காண்கிறார் இளங்கோவடிகள். 'சனிக்கோள் புகைந்தாலும் தூமகேது தோன்றினாலும் விரிந்த ஒளியினை வழங்கும் சுக்கிரன் தன் திசை மாறி தென்திசை செல்லினும் குடகுமலை உச்சியில் மேகம் பொழியும் நீர் கொண்டு பல பண்டங்களோடு பூம்புகாரில் கடல்துறையைத் தாக்கும் காவிரி' என்று அது தரும் வளத்தை வாழ்த்திப் பாடுகிறார் இளங்கோ அடிகளார்,

கரியவன் புகையினும் புகைக்
கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம்
படரினும்
கால்பொரு நிவப்பிற் கடுங்குர
லேற்றெழுந்
சூன்முதிர் கொண்மூப் பெயல்
வளஞ்சுரப்பக்
குடமலைப் பிறந்த கொழும்பல்
தாரமொடு
கடல்வளன் எதிரக் கயவாய்
நெரிக்கும் காவிரி

*சிலம்பு-நாடுகாண்காதை : 102-108*

நெஞ்சை அள்ளும் சிலம்பில் உள்ளத்தைக் கொள்ளைக் கொள்ளும் பாடல்கள் கானல் வரியில் நிறைந்துள்ளன. அவற்றுள் கோவலனும் மாதவியும் ஆற்று வரியாகப் பாடுகின்ற ஆறு பாடல்கள் உலக இலக்கிய அரங்கில் இடம் பெறத் தக்கன.

இருவரும் காவிரியை இளம் பெண்ணாகக் கற்பித்துப் பாடுகின்றனர். தலைவன் தவறு செய்தாலும் மனையாள் இருக்கும் போதே வேறு ஒருத்தியை நாடிப் போகின்ற அளவு பெருந்தவறு செய்தாலும் அதனையும் பொறுத்து அகமுடையானை ஆதரிக்கும் பத்தினிப் பெண்ணாகக் கோவலன் காவிரியை உருவகித்துப் பாடுவதாக இளங்கோ இயம்புகிறார்.

'காவிரிப் பெண்ணே! உன் தலைவனாகிய சோழன் வட நாட்டைவென்று கங்கையும் கொண்டான்: பாண்டி நாட்டை வென்று கன்னியாகுமரியையும் கொண்டான். என்றாலும் நீ வெறுக்காமல் அவன்பால் அன்பு கொண்டாய், இதனை என்னென்று சொல்வேன். 'பெருங்கற்பு உடையவள் நீ'

கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற் கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென்
றறிந்தேன் வாழி காவேரி

*கானல்வரி, பாடல் 2*

கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற்கண்ணாய்

# சொற் சித்திரம்!

திதத் தத்தத் தித்தத் திதி தாதை தாததுத் தித்தத் திதா
திதத் தத்தத் தித்த திதித்தித்த தேதுத்து தித்தி தத்தா
திதத் தத்தத் தித்தத்தை தாத்தி தேதுதை தாத தத்து
திதத் தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீ தொத்ததே.

அருணகிரி சுவாமி அருளிய கந்தர் அந்தாதி - 54ம் பாடல்

## பதவுரை

திதத் தத் தித்தித்த - திதத்தத் தத்தித்த எனும் தாளமானங்களை
திதி - திருநடனத்தால் காக்கின்ற
தாதை - பரமசிவனும், தாத - பிரமனும்
துத்தி - படப் பொறியினையுடைய, தத்தி - பாம்பினுடைய
தா - இடத்தையும், திதி - நிலைபெற்று, தத்து - ததும்புகின்ற
அத்தி - சமுத்திரத்தையும் பாயலாகக் கொண்டு, ததி - தயிரானது
தித் தித்ததே - தித்திக்கின்றதென்று, து - உண்ட கண்ணனும்
துதித்து - துதி செய்து போற்றுகின்ற
இதத்து - பேரின்ப சொரூபியான, ஆதி - முதல்வனே
தத்தத்து - தந்தத்தையுடைய
அத்தி - அயிராவத்தால் வளர்க்கப்பட்ட
தித்தை - கிளி போன்ற தெய்வயானைக்கு, தாத - தொண்டனே
திதே - தீமையே, துதை - நெருங்கிய
தாது - சப்த தாதுக்களால் நிறைந்ததும்
அதத்து - மரணத்தோடும், உதி - சனனத்தோடும்
தத்தும் - பல தத்துக்களோடும்
அத்து - இசைவுற்றதுமான, அத்தி - எலும்புகளை மூடிய
தித்தி - பையாகிய இவ்வுடல், தீ - அக்கினியால்
தீ - தகிக்கப்படுகின்ற, திதி - அந்நாளிலே
துதி - உன்னைத் துதிக்கும், தீ - புத்தி
தொத்தது - உனக்கே அடிமையாக வேண்டும்.

கருத்து: திதத்தத் தத்தித்த எனும் தாளத்தால் நடிக்கும் பரமசிவனும், பிரமாவும், தயிரையுண்டு பாற்கடலையும், ஆதிசேடனையும் பாயலாகக் கொண்ட திருமாலும் போற்றும் முதல்வனே, தெய்வயானை தாசனே, சனன மரணத்திற்கு இடமாய் எலும்பு முதலிய தாதுக்கள் நிறைந்த பொல்லாத இவ்வுடல் தீயில் வேகுங்கால் உன்னைத் துதிக்கும்படி என் புத்தியை உனது அடியிணைக்கு ஆட்படுத்த வேண்டும் என்பதாம்.

இப்பாடலில் ஒரு விசேஷம் என்ன வென்றால் பாடல் ஆரம்பித்து முடியும்வரை உதடுகள் ஒட்டாமல் பாடப்படுவது ஒரு பிரதான அம்சம். இப்பாடல் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒருங்கிணையும் ஒரு தாரக மந்திரம். உதடுகள் ஒட்டி வாய்மூடி துதிப்பது ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இணைய பக்குவம் விரைவில் கிடையாது என்பதாம்.

மேற்படி பாடல் 7-ம் எழுத்தான உயிர்மெய் எழுத்து 'த' என்ற எழுத்தின் அம்சமாகவே பாடல் விளங்குகிறது.

திரு. கே. ஏ. சிதம்பரம் - பொள்ளாச்சி-2.

மன்னு மாதர் பெருங்கற்பென்
றறிந்தேன் வாழி காவேரி.

கானல்வரி, பாடல்-3

மாதவி பாடுகின்ற காவிரி பற்றிய பாடல்கள் அழகான சொல்லோவியங்கள். பெண்ணின் பெருமைக்கு ஆணின் அறவாழ்வே காரணம் என்பதைத் தெளிவாகக் காட்டுவன அப் பாடல்கள். நல்ல கணவனை மணந்து கொண்ட மங்கை ஒருத்தி தன் தாய் வீட்டுக்கு மீளும் போது தன்னோடு பழகிய தோழிகளும், தன் உறவினர்களும் கண்டு மகிழ மெல்ல அசைந்து அசைந்து இருமருங்கும் நின்று காணும் எல்லோரிடமும் தன் கண்களால் பேசியவாறு ஒசிந்து நடந்து செல்வதாகவும் அவளின் அந்தப் பெருமித நடைக்குத் தலைவனின் நேர்மையான வாழ்வே காரணம் என்றும் சுட்டிக் குறிப்பிடுகின்றன முதலிரண்டு பாடல்கள்,

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ
ஆடை அது போர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழி காவேரி !
கருங்க யற்கண் விழித்தொல்கி
நடந்த வெல்லாம் நின் கணவன்
திருந்து செங்கோல் வளையாமை
அறிந்தேன் வாழி காவேரி!

கானல்வரி, பாடல்-25

இவ்வாறு சோழ நாட்டையே தன் மகவாய்க் கொண்டு ஊழிதொறும் ஊழி தொறும் ஒழியாமல் பேருதவி புரிந்து வரும் காவிரித்தாய் வாழ்க என இளங்கோவின் உள்ளம் வாழ்த்துகிறது,

வாழி யவன்றன் வளநாடு
மகவாய் வளர்குந் தாயாகி
ஊழி யுய்க்கும் பேருதவி
ஒழியாய், வாழி காவேரி.

கானல்வரி. பாடல்-27



தலைக்காவிரியில் தண்ணீர் தொட்டியிலிருந்து வழிந்து விழுந்தோடும் பொன்னி பச்சிளம் பெண் கோலத்தில் துள்ளி வந்தவள் பருவமடைந்து மேகதாடுவைத் தாண்டியதும் தமிழ் மண்ணில் காலடி வைக்கிறாள்.

'வருக பொன்னித் தாயே வருக'

தமிழ் நாட்டின் உயிர் நாடியாக விளங்கும் நீ மக்களின் வாழ்வை வளம்படுத்தி கலைகளை வளர்த்து எங்கள் வாழ்வுடன் பிணைந்து விட்டாயே! தமிழ் நாட்டின் புலவர்கள் எல்லோரும் எக மனதாக உன்னைப் புகழும்போது நான் எப்படி உன்னைப் புகழ்வது?

கம்பன் இளங்கோ எல்லோரும் உன்னைப் புகழ்ந்துப் பாடியிருக்கிறார் எதைக் குறிப்பிடுகிறீர்கள்?

கொங்குநாட்டின்இயற்கைஎழிலைப் பருகி ஆனந்தமாகப்பாடியிருக்கிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். அவர் கண்ட காட்சி எல்லாம் உங்களைச் சுற்றியே வட்டமிடுகிறது.

ஞானப்பாலுண்ட சம்பந்தப்பெருமானோ "பருவம் மாறாத பொன்னி நதி சூழ் பாண்டிக் கொடுமுடி" என்று உங்களை மார்க்கண்டேயனைப் போல சிரஞ்சீவித்துவமுள்ளவளாக வருணித்திருக்கிறாரே!

உழுதுப்பயிரிடும் மக்களை காவேரியின் புதல்வர்கள் என்று இளங்கோ வடிகள் குறிப்பிடுகிறார்.

ஞான சம்பந்தரையும் திருமங்கை ஆழ்வாரையும் சேர்த்து வைத்து சைவத்தையும் வைணவத்தையும் சந்திக்கச் செய்தது நீ தானும்.

கோள்நிலை திரிந்துகோடை நீடினும்
தன்நிலை திரியாத்தண்டமிழ் பாவை

என்கிறார் சாத்தனார். நீ என்னடா என்றால் தமிழ் நாட்டில் பெரும் பாலும் மணல் ஆறாகவே காட்சி தருகிறாய்?

நான் என்ன செய்யட்டும் என்னைத் தான் கட்டுப்படுத்தி விடுகிறார்களே!

உன்னைக் கட்டுப்படுத்தாவிட்டால் உன் கணவனைச் சந்திக்கும் குதூகலத்தில் அவ்வளவு தண்ணீரையும் கடலில் கொண்டு போய் கொட்டிவிடுவாயே. ஏன் வெட்கப்படுகிறாய்.கணவன் என்பதும் வெட்கம் வந்து விட்டதா? நாணிக் கண் புதைக்கிறாயே!

புலவர்கள் நீ சமுத்திர ராஜனின் மனைவி என்றே பாடி யிருக்கிறார்கள். "ஸ்ரோ தோவஹா ஸாகரகாமிவே" என்கிறார் காளிதாஸர்.

# நடந்தாய் வாழி காவிரி

நஜன்

வடமொழி ராமாயணக் கடலுடன் தமிழ் கடலைப் புகுத்தி கம்பராமாயணம் ஆக்கியதும் நீ தானும்.

இப்படி எல்லாம் யார் சொல்கிறார்கள்.

சோழ மண்டலச் சதகம் குறிப்பிடுகிறது.

அப்புறம்

கொஞ்சும் தமிழிலே விஞ்சி நின்ற திருமங்கை ஆழ்வார் இடம் கிடைக்கும் போதெல்லாம் பாட்டிலே பாதி உனக்கு இடம் கொடுத்தே பாடியிருக்கிறார்.

கவிச்சக்கரவர்த்தியான கம்பர் "காவிரி நாடன்ன கழனி நாடொரீ" என்றும் கூறும் வாயிலாக சரயூ நதிக்கு உன்னை உபமானம்ஆக்கினார்: கள். மேலும் உங்களுக்குக் கோவிலும் கட்டியிருக்கிறார்கள்.

எனக்குக் கோவிலா? அப்படி ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லையே!

கும்பகோணம் காசி விஸ்வநாதர் கோவிலில் நீங்கள் கங்கை யமுனை சகோதரிகளுடன் நடுநாயகமாக விளங்குகிறீர்கள்.

ஓஹோ நீங்கள் அதைச் சொல்கிறீர்களா? எனக்கென்று கோவிலும் வேண்டாம், குளமும் வேண்டாம். உங்கள் மனதில் இடம் கிடைத்தால் போதும்:

எங்கள் மனதில் இடம் பெறுமலா இலக்கியங்களில் எல்லாம் நீங்கள் இடம் பெற்றிருக்கிறீர்கள்?

மற்றொரு புலவர் லக்ஷ்மி உன்மகள் என்று வருணிக்கிறார்.

எப்படியாம்

என்ன இப்படி கேட்கிறாய். உன் கணவர் சமுத்திரராஜனின் மகள் தானே லக்ஷ்மி. அப்போது அவள் உன் பெண்தானே:

திருமகளை உன் மகளாகக் கொண்டதால் நீ பாயுமிடம் எல்லாம் செல்வச் செழிப்பு இருந்து வருகிறதே:

செந்நெல் கவிரி வீசும்
செழுநீர் திருக்குடந்தை

என்கிறார் நம்மாழ்வார்.

பொன் கொழி காவிரி வடகரை திருப்பெரு மங்கலத்தை சேக்கிழார் பாடியிருக்கிறார்: புலவர்கள் கூறுவது இருக்கட்டும். எனக்குத்

தெரிந்த வரை உன் பெருமையை எடுத்துச் சொல்ல அனுமதி வேண்டும்.

சொல்லுங்கள். நீங்கள் என்ன சொல்கிறீர்கள் பார்க்கலாம்.

உன்கரையில்தான் அ ர ங் க ன் பள்ளி கொண்டார். ஆடவல்லான் ஆடி மகிழ்கிருர். உன் மடியில்தான் எத்தனை கவிஞர்கள், புலவர்கள் மேதைகள், வேதாந்திகள், அடியார்கள், வீரர்கள், வள்ளல்கள், கற்புக் கரசிகள் புகழுடன் தோன்றி பூமியே போற்ற வாழ்ந்துள்ளார்கள். கம்பனை யும் கண்ணகியையும் கொடுத்தது ஒன்று போதாதா? இன்றைக்கும்தூய வைதிக வழியை 'காவேரி சம்பிர தாயம்' என்கிருர்கள்.

நீ ஸ்ரீரங்கநாதருக்கு மாலைபோல அமையவும் பெற்றதாக ஒரு சம்ஸ் கிருத மேதைக் குறிப்பிட்டிருக்கிருர் யார் அந்த மகான்? பட்டர் என்ற அம்மகான் ''லோகேஸ் மிந் விரஜேவ வேல்லிதஜலா ஸ்ரீரங்கம் ஆலிங்கதி (இவ்வுலகில் விரஜை போல திரு வரங்கத்தை அணைத்துக் கொள் கிருள்)என்றும்,'காவேரி லஹரி கரை விதி தீபா யேதிஸா ஸேவ்யதாம்' (அலைகள்ஆட ஆடிவரும் காவேரியை தரிசியுங்கள்) என்றும் குறிப்பிட்டி ருக்கிருர்.

பாண்டி நாட்டின் நல் முத்துக் களான ஆண்டாளும் மாணிக்கவாசக ரும் அரங்கனையும் நடராஜனையும் அடைய உன் கரைக்குத் தானே வந்தார்கள்? இங்கேயே இறைவனு டன் ஐக்கியமும் ஆனுர்கள். வட நாட்டில் பிறந்த ராமனும் உன் கரைக்குத் தான் வந்தான்.

ஆமாம்! உங்களுக்கு என்னதான் வேண்டும் சொல்லுங்கள்.

எனக்கு என்னம்மா வேண்டும்? உன் தயவு என் தமிழ் நாட்டுக்கு என்றும் வேண்டும். முடிந்தால் என் வீட்டுக்கிணற்றிலேயே நீ வாசம் செய்யவேண்டும்.

இவ்வளவுதானே! அப்படியே ஆகட்டும். ★

# காவேரி புஷ்கரமும் திருவரங்கமும்

ஸ்ரீரங்கம் ஸ்ரீ ரெங்கனுதன் இட்வாகு மகாராஜாவால் ஆராதிக் கப்பட்டு, பிறகு பிரம்மா, ஸ்ரீ சக்ரவர்த்தி திருமகனுல் ஆராதிக்கப் பட்டார். ஸ்ரீ ராம பட்டாபிஷேகத்தின்போது ஸ்ரீ விபிஷண ஆழ் வானுக்கு ஆராதித்த ரெங்கனுதனை தானமாக அளித்தார். ஸ்ரீ விபிஷண ஆழ்வான் தான் ரெங்க விமானத்தை இலங்கைக்கு செல்லும் வழியில் முன்பு ரெங்கனுதன் காவேரிக்கு கொடுத்த வரத் தால் காவேரியின் மத்தியில் தான் வாசம் செய்ய உத்தேசித்ததை ஸ்ரீ விபிஷண ஆழ்வான் மூலமாக பூர்த்தி செய்து கொண்டார்.

இந்த ரெங்கனுதனை பன்னிரு ஆழ்வார்களும், வைஷ்ணவ ஆசார்யர்களான நாதமுனிகள் தொடங்கி மாமுனிகள் ஈராக ரெங்கனுதனையும், காவேரி நதியையும் போற்றி மகிழ்ந்தார்கள். ஸ்ரீ ரங்கத்தில் காவேரி ரெங்கனுக்கு மாலை அணிவித்தது போல இரண்டாகப் பிரிந்து காட்சி அளிக்கிருள். ஸ்ரீ ரெங்கனுதன் காவேரிக்கு இரண்டு முறை எழுந்தருளுகிருர். சித்திரை மாதம் பௌர்ணமி அன்றும், ஆடி மாதத்தின் 18-ம் தேதி அன்றும். ஆடி மாதத்தில் காவேரியை கல்யாணம் செய்து கொள்வதாக ஐதீகம். அன்று மாலை, புடவை, திருமாங்கல்யம் ஆகியவைகளை காவேரியில் சேர்க்கிருர்கள்.

காவேரி ஐப்பசி மாதத்தில் ஸ்நாநம் செய்வது ரொம்ப விசேஷம் என்று துலா புராணம் கூறுகிறது. வருடத்தில் ஐப்பசி (துலா மாதம்) ஸ்ரீ ரெங்கனுதனுக்கு தங்கக் குடத்தில் திருமஞ்சனம் 30நாட்களுக்கும் கொண்டு வருவார்கள். துலா மாதத்தில் ஸ்ரீரெங்க னுதனுக்கு ஆராதனம் செய்யப்படும் பாத்திரங்கள் எல்லாம் தங்கத் தால் ஆனதே.

மிகவும் புனிதமான காவேரி நதியில் 12 வருஷத்திற்கொரு முறை உலகில் உள்ள எல்லா புண்ணிய தீர்த்தங்களும் வந்து சேரு மென்று புராணங்கள் கூறுகின்றன. புனிதமான அச் சமயத்தில் ஸ்நானம், தானம் முதலிய புண்ய காரியங்கள் செய்தால் நூறு அஸ்வமேதயாக பலன் கிடைக்குமென்று புராணங்கள் கூறுகின்றன. அப்படிபட்ட பவித்ர நாட்களில் ஸ்ரீ ராம மஹா க்ரது நடத்த ஏற் பாடு செய்யப்பட்டிருக்கிறது. 12 நாட்களும் தினந்தோறும் ஸங் க்ஷேம ராமாயண ஹோமம், நான்கு வேத, புராண, இதிஹாச, திவ்யப்ரபந்த பாராயணங்கள் நடத்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. ஆஸ்திக மஹா ஜனங்கள் இந்த புண்ணிய தினங்களில் கலந்து கொண்டு ஸ்ரீரங்கத்தில் காவேரி நதியில் நீராடி, ஸ்ரீ ரெங்கனுதன் க்ருபா கடாக்ஷத்தை பெற வேணும் என்று ப்ரார்த்திக்கிருேம்.

# ★ சேரவாரும் ஜகத்தீரே! ★

பாரத தேசத்தில் பிறக்கும் பேறு பெற்ற நாம் நதிகளை ஆண்டவனை அடைய அடிகோலும் புண்ய தீர்த்தங்களாகக் காண்கிறோம். ஆண்டுக்கு ஒரு முறையோ அல்லது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறையோ பாரதம் முழுவதுமே ஏதாவது ஒரு நதி தீரத்தில்கூடி நீராடி அக மகிழ்கிறது. சகோதரி நிவேதிதை அமெரிக்காவிலுள்ள நயாகரா நீர் வீழ்ச்சியைப் பற்றிப் பேசும்போது "நயாகரா நீர் வீழ்ச்சி கங்கையின் பிரவாஹத்தில் விழுமானால் (இப்போதுள்ள) உலகத்தை அனுபவிக்கும் சாதனங்களைச் சேகரிக்கும் 'ஹோட்டல்'களுக்குப் பதிலாக மனதில் பெருக்கெடுக்கும் பக்தியைச் செலுத்துவதற்காக கோவில்கள் ஏற்பட்டிருக்கும். பகட்டான உல்லாச வாழ்க்கைக்குப் பதிலாக இங்கு ஸ்ருஷ்டியின் வைபவத்தை வியந்து மக்கள் தவம் புரியத் தொடங்கியிருப்பர்" என்று கூறுகிறார்.

வியாஸ பகவான் நதிகளைப் புவியின் அன்னைகள் (விஸ்வஸ்ய மாதர:) என்று குறிப்பிடுகிறார். நாம் புனிதமான காரியங்களை ஆரம்பிக்கும் போது செய்து கொள்ளும் ஸங்கல்பத்தில்,

கங்கே ச யமுனே சைவ கோதாவரீ
ஸரஸ்வதி ।
நர்மதே ஸிந்து காவேரி ஜலே அஸ்-
மின் ஸந்நிதிம் குரு ॥

என்று புண்ய தீர்த்தங்களை நாம் வைத்துக் கொண்டுள்ள நீரில் ஆவாஹனம் செய்கிறோம். இந்த ஏழு தீர்த்தங்களில் காவிரி இடம் பெறுகிறது. காவிரியை 'தக்ஷிண கங்கை' என்று அழைத்து கங்கைக்கு ஸமானமாகக் கருதுகிறோம். தொண்டரடிப் பொடி ஆழ்வாரோ ஒருபடி மேலே சென்று 'கங்கையிற் புனிதமாய காவிரி' என்கிறார். தொண்டர்தம் பெருமை பேசும் சேக்கிழார் காவிரியை பூமகளின் மார்பில் திகழும் முத்துமாலையாக வர்ணிக்கிறார்.

மிகப் பழைமையான ருக்வேதத்திலேயே காவிரி பற்றிய குறிப்புகள் உள்ளன. காவிரியின் பெருமை அகஸ்தியலோபாமுத்ரா ஸம்வாதத்தில் விளக்கப்படுகிறது. அகஸ்தியர் லோபாமுத்திரையைப் பார்த்து பசியால் வாடும் குழந்தைகளுக்கு சமயமறிந்து பால் கொடுக்கும் தாய் போல தக்ஷிண பாரதத்தில் பாய்ந்து மக்களின் பாவங்களைப் போக்குமாறு கூறுகிறார். லோபாமுத்திரையே ஸஹ்ய மலையில் கவேர மகிரிஷிக்குப் புத்ரியாக பிரம்மனால் கொடுக்கப்பட்டாள்; பின்னர் காவிரியாகப் பிரவஹித்தாள். இதுவே ருக்வேதத்தில் புலப்படும் காவிரியின் வரலாறு. இராமாயணத்தில் சுக்ரீவன் அனுமனிடம் தெள்ளிய நீருடன் கூடிய (ப்ரஸன்ன ஸலிலாம்) காவிரியைப் பற்றிக் கூறுகிறான். ப்ரம்ம புராணம்,

திரு. என். சந்திரசேகரன், M.Sc.,
திருச்சி-17

ஸ்காந்தம், அக்னி புராணம், பிரம்மவைவர்த்த புராணம் போன்ற புராணங்களும் காவிரி மான்மியத்தை விரிவாக எடுத்துரைக்கின்றன.

பிற்காலத்துச் சமய இலக்கியங்களும் காவிரியைப் புகழ்ந்து பாடுகின்றன. தேவாரம் பாடிய மூவரும் காவிரித் தாய்க்கும் புகழாரம் சூட்டுகின்றனர். சம்பந்தர் கங்கையை ஒத்த பெருமையுடையது காவிரி ('கங்கைக்கு ஏயும் பொன்னி') என்கிறார். காவிரியின் பரந்த நீர்ப் பரப்பை 'கலவ மயிலும் குயிலும் கடல் போல் காவிரி' என்று வியந்து பாடுகிறார். கரையில் முத்துக்களையும் சந்தனத்தையும், பொன்னையும் மற்ற செல்வங்களையும் கொண்டு சேர்க்கும் பொன்னியின் வள்ளல் தன்மையை சுந்தரர் 'மணியு முத்தும் பொன்னுங் கொண்டலைக்குந் திரைக் காவிரி' என்று புகழ்கிறார்.

ஆழ்வார்களும் அரங்களைப் பாடும் போது அவனது திருவடிகளை வருடும் காவிரியைப் பாட மறப்பதில்லை. தொண்டரடிப் பொடி ஆழ்வார் திருவரங்கத்தை,

" கங்கையிற் புனிதமாய காவிரி நடவு
பாட்டுப்
பொங்குநீர் பரந்துபாயும் பூம்பொழி
லரங்கம்"

என்று குறிப்பிடுகிறார். பெரியாழ்வாரோ அரங்கனடி பணியும் காவிரி அன்னையை,

" தழுப்பரிய சந்தனங்கள் தடவரை
வாயீர்த்துக் கொண்டு
தெழிப்புடைய காவிரி வந்தடி
தொழும் சீரரங்கமே"

என்று பாடி மகிழ்கிறார். அரங்கனிடம் விசேஷ ஈடுபாடு கொண்ட திருமங்கையாழ்வாரும் தந்தமும் அகிலும் கொண்டு சேர்க்கும் காவிரியை,

" தொலைக்கையானை மருப்பும் அகிலும்
கொணர்ந்துந்தி முன்
திலைக்குஞ் செல்வப் புனற் காவிரி
சூழ் தென்னரங்கமே"

என்ற அடிகளாற் பாடிப் பரவுகிறார்.

பக்தி இலக்கியங்களில் மட்டுமன்றி மற்ற இலக்கியங்களிலும் காவிரி இடம் பெறுகிறாள். வெள்ளி எனும் விண்மீன் வடக்கே செல்லாது தெற்கே சென்றாலும், மழையின்மை

யால் வானம்பாடிப் பறவை உண வின்றி (வானம்பாடிக்கு உணவு மழை நீர்த்துளிகள்தாம்) வாடும் காலத்திலும் காவிரியன்னை பொய்ப் பதில்லை; எக்காலத்தும் பெருக் கெடுத்து வருகிறாள். இதுவே 'வான் பொய்ப்பினும் தான் பொய்யா மலைத்தலைஇய கடற் காவிரி' பற்றிப் பட்டினப் பாலை தரும் சொற் சித் திரம். 'பொன் கொழிக்கும் காவிரி' என்று புறநானூறு குறிப்பிடும் பொன்னியின் மகிமையால் சோழ நாடு வளம் பெறுவதை பொருந ராற்றுப்படை விளக்குகிறது. காவிரி பாயும் அழகில் மயங்கிய இளங்கோவடிகள்,

"மருங்குவண்டு சிறந்தார்ப்ப மணிப்
பூவாடை அது போர்த்து
கருங்கயற்கண் விழிதொல்கி நடந்
தாய் வாழி காவேரி"

என்று வாழ்த்துகிறார். மணிமேகலை யின் ஆசிரியர் சீத்தலைச் சாத்தனாரும்,

"கோள்நிலை திரிந்து கோடை நீடினும்
தான்நிலை திரியாத் தண்டமிழ்ப்
பாவை"

என்று காவிரியைப் பாடுகிறார். பிற் கால இலக்கிய கர்த்தாக்களான கம்பர் முதல் காளமேகப் புலவர் வரை பொன்னி நதி புகழ்பாட மறக்கவில்லை.

இத்துணை பெருமை வாய்ந்த காவிரியை பையத் துயின்ற பரம னும், பால் வெண்ணீறணிந்த பரம னும் கொண்டாடாமல் இருப்பார் களா? காவிரிக் கரையில் பற்பல இடங்களில் கோவில் கொண்டு நமக்கு அருள் பாலிக்கின்றனர். ஸ்ரீதுண்டிராஜவ்யாஸர் தனது காவிரி ஸ்தோத்ரத்தில் "ஹே காவிரி! உன் னைத்தான் ஈசன் அதிகம் நேசிக்கி றார். ஆனால் என்ன காரணத்தாலே கங்கையைத் தனது ஜடாமுடியில் அடக்கிச் கொண்டு நீ செல்லுமிட மெல்லாம் கோவில் கொண்டு நிற்கி றார்" என்று காவிரிக் கரையில் ஈசன் கோவில்கள் நிறைய இருப் பதை இலக்கிய நயத்தோடு எடுத்து ரைக்கிறார். கற்கோவில்கள் பல படைத்த மஹேந்திர பல்லவனின் கற்பனை இன்னும் சுவையானது. திருச்சி மலைக்கோவிலுள்ள கல்வெட் டில், "இருகரைகளிலுமுள்ள பூஞ் சோலைகளை மாலையாகக் கொண்ட காவிரியைக் காண நதிப்ரியரான சிவ பிரான் மலைமேல் அமர்ந்திருக்கிறார். ஏற்கனவே கங்கை நதியைத் தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடும் ஆடல் வல்லான் காவிரியையும் நேசிக்கக் கூடும் என்ற சந்தேகத்துடன் பார் வதி இமயமலையை விட்டுவிட்டுவந்து

இறைவனுடன் அமர்ந்திருக்கிறாள். ஈசனிடம் 'காவிரி பல்லவனுக்கு உரியவள்' என்று நினைவுபடுத்திக் கொண்டிருக்கிறாள்'' என்று காவிரியின் பெருமையை பொறித்து வைத்திருக்கிறான்.

ஸஹ்யாத்ரி மலையில் தோன்றி, ஸ்ரீரங்கப்பட்டணத்திலும், சிவசமுத்ரத்தீவிலும், ஸ்ரீரங்கத்திலும் மாலை போல் பிரிந்து அரங்கனின் திருவடிகளை வருடிக்கொண்டு, பூம்புகாரில் சமுத்ரத்தில் கலக்கும் வரை காவிரிக் கரையில்தான் எத்தனை கோவில்கள்! நெல்லிமர வடிவிலுள்ள திருமாலின் திருவடிகளிலே பிறந்து சிறிய சுனை போன்ற வடிவுடன் இருக்கும் தலைக் காவேரியை தரிசித்துக் கொண்டு கிளம்பினால் ஆதிரங்கமான ஸ்ரீரங்க பட்டணத்தில் ரங்கநாதரை அவரது காலடியில் வீற்றிருக்கும் காவேரி அன்னையுடன் தர்சிக்கலாம். 'அரியும் சிவனும் ஒண்ணு' என்று தெளிவு படுத்தும் வகையில் கங்காதரேஸ்வரரையும் கண்டு மகிழலாம். இன்னும் காவிரிக்கரையுடன் சென்றால் கலையழகு மிளிரும் பெட்டகம் போன்ற கோவிலில் சென்ன கேசவரை தரிசிக்கலாம்: தலைக்காட்டில் மலைக்குன்றுகளிடையே எட்டடி உயரத்தில் கம்பீரமாக ஸேவை ஸாதிக்கும் கீர்த்தி நாராயணஸ்வாமியின் அருளைப் பெறலாம். மத்திய ரங்கமான சிவசமுத்திரத் தீவில் பள்ளிகொண்ட பெருமாளை மற்றொரு முறை தரிசிக்கலாம். இங்கு பெருமாள் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் ஜகன் மோகன ரங்கநாதராகக் காட்சி கொடுக்கிறார்.

ஹொகெனக்கல்லில் புகைபோல் எழும் நீர் வீழ்ச்சியாக விழும் காவிரி தமிழ்நாட்டில் அடியெடுத்து வைக்கிறாள். தமிழகத்தில் பாயும் காவிரியின் கரையில்தான் எத்தனை கோவில்கள்! ஹரியும், ஹரனும் போட்டிப் போட்டுக்கொண்டல்லவா நமக்கு அருள் பொழிகிறார்கள். பலநாமம் கொண்ட திருமால் குணசீலத்தில் வேங்கடவனாகவும், அந்தியரங்கமான ஸ்ரீரங்கத்தில் திருவரங்கனாகவும், கண்டியூரில் ஹரசாபம் தீர்த்த பிரானாகவும், வரகூரில் வராஹரூபத்தில் நாராயண தீர்த்தரை ஆட்கொண்ட லக்ஷ்மீ நாராயணனாகவும், கும்பகோணத்தில் சாரங்கபாணியாகவும், ஆடுதுறையில் வையங் காத்த பெருமாளாகவும் காட்சி கொடுக்கிறார். சிவனோ ஈங்கோய்மலையில் மரகதேஸ்வரராகவும், ஆனைக்காவில் அப்புலிங்கமாகவும், திருச்சிராப்பள்ளியில் தாயுமான ஈசராகவும், ஐயாற்றில் செம்பொற்சோதியாம் ஐயாரப்பனாகவும், குடந்தையில் கும்பேசராகவும், நாகேஸ்வரராகவும் திருவிடைமருதூரில் மஹாலிங்க ஸ்வாமியாகவும், குத்தாலத்தில் கல்யாண சுந்தரராகவும், மாயவரத்தில் அம்பிகை பூஜை செய்யும் மயூரநாதராகவும் மக்களுக்கு அருள் பாலிக்கிறார். காவிரிக்கரைக் கோவில்களிலுள்ள ஆண்டவனின் நாமங்களைக் கூறினால் ஒரு ஸஹஸ்ரநாமமே நமக்குக் கிடைக்கலாம்.

காவிரியின் மடியில் வாழ்ந்த மகான்கள் எத்தனை பேர்! தேவாரம் பாடியமூவரும், திருப்பாணாழ்வாரும், திருமங்கையாழ்வாரும், தொண்டரடிப் பொடி ஆழ்வாரும் காவேரி தீர்தத்தில்வாழ்ந்து தெய்வநெறிபரப்பியவர்கள். காவேரி தீரவாஸியான மற்றொரு மகான் பகவந்நாம போதேந்திர ஸ்வாமிகள். இவர்தாம் ராமநாம மஹிமையை ப்ரத்யக்ஷமாக நிரூபித்து நாமபாராயண மஹிமையை உலகிற்கு உபதேசித்தவர். தனது உடலைப் பற்றிய ப்ரக்ஞையின்றி ஜீவன் முக்தராக வாழ்ந்து, அத்வைதக் கருத்துகளை இனிமையான கீர்த்தனங்களில் இசைத்த ஸதாசிவ ப்ரம்மம் நிர்விகல்ப ஸமாதி அடைந்தது காவிரிக் கரையிலுள்ள நெரூரில் தான். திருவிசநல்லூரில் வாழ்ந்த ஸ்ரீதர அய்யாவாள் தன் வீட்டுக் கிணற்றில் கங்கையைப் பொங்கச் செய்த மகான். ஸ்ரீராகவேந்தர ஸ்வாமிகளும் காவிரி தீரவாஸிதான்.

காவிரியன்னை சமயத்துறை மட்டுமன்றி இசைத்துறையிலும் மகான்களைப் படைக்கத்தவறவில்லை. சங்கீதமும்மூர்த்திகளான த்யாகராஜர், முத்துஸ்வாமி தீக்ஷிதர், ச்யாமா சாஸ்திரிகள், க்ருஷ்ணலீலாதரங்கிணி படைத்த நாராயணதீர்த்தர்போன்ற மகான்கள் காவிரியின் புதல்வர்கள். நமது பாவங்களை நீக்க நம்மை அழைக்கிறாள் காவிரி அன்னை. காவிரி மட்டும் நம்மை அழைக்கவில்லை. தியாகராஜ ஸ்வாமிகளும் அஸாவேரி ராகத்தில் அழகு தெலுங்கில் 'ஸாரி வெடலின' எனும் கீர்த்தனையால் நம்மை அழைக்கிறார்.

"நல்லோர் தீயோர் வேறுபாடின்றி மக்களின் விருப்பங்களை நிறைவேற்ற அழகுடன் பவனிவரும் காவிரியைப் பாருங்கள். ஒருபுறம் அதிவேகமாகவும், மற்றொருபுறம் பயங்கர கர்ஜனையுடனும் மற்றொரிடத்தில் இரக்கத்துடனும் பெருகி வரும் அழகைப் பாருங்கள். குயில்கள் இசைபாட ஸ்ரீ ரங்கநாதரை தரிசித்தபின் பஞ்சநதீஸ்வரனைக் காணவரும் இக்காவிரியைப் பாருங்கள் இருகரைகளிலும் மறையோர்கள் 'ராஜராஜேஸ்வரி' என்று போற்றி மலர்கொண்டு பூஜிக்க, த்யாகராஜனால் வணங்கப்படும் இக் காவிரியைப் பாருங்கள்.''

சேரவாரும் ஜகத்திரே! நம் பாவங்களைப் போக்கிக் கொள்ள காவிரியில் நீராடலாம்; நினைத்ததையெல்லாம் பெறலாம்! ★

---

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

சுந்தர மூர்த்தி சுவாமிகள் சேர மானுடன் இத்தல தரிசனத்திற்கு வந்து தென் கரையில் நின்றபோது காவிரியின் பெரு வெள்ளம் ஓடம் விடாத நிலையில் இருந்தபோது சுந்தரர் பெருமானைப் பாட காவிரியின் வெள்ளமானது இடையில், அதாவது முன்னர் கண்ணபிரான் ஜெனனத்தின்போது வாசுதேவர் நள்ளிரவில் கண்ணனைத் தலைமீது சுமந்து ஆயர் பாடிக்கு போனபோது யமுனை வெள்ளம் இடையில் விலகி வழி விட்டதுபோல்,பிரிந்து வழி விட்டது.

இத்தகைய காவிரியில் ஐப்பசி மாதம் முழுதும் (துலா ஸ்நானம்) நீராடும் புனித வழக்கம் இன்றும் இத்திருவையாற்றிலும் மாயூரத்திலும் விசேஷமாக நடைபெற்று வருகின்றது. இத்தகைய புனித காவிரித் தலங்களில் ஒன்றான இத் திருவையாற்றின் பெருமை எல்லையற்றது. இத்தலம் தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் தஞ்சைக்கு வடக்கில் 13 கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

வந்திருக்கிறேன். மருந்துகளுடன் மருத்துவம் செய்யப் பெண்களையும் அழைத்து வந்திருக்கிறேன்' என்று நா தழதழக்கக் கூறினார்.

தாயைக் கண்ட ரத்னவளிக்கு ஆனந்தம் பொங்கியது. தாய் கொண்டு வந்த பக்ஷணங்களைக் கண்டு 'தாயே! நான் விரும்பிய தின்பண்டங்களைக் கடிதத்தில் எழுத மறந்து விட்டேன். தாங்கள் அதையும் செய்து கொண்டு வந்திருக்கிறீர்களே!' என்று ஆச்சரியப்பட்டாள்.

அதைக் கேட்ட தாய் 'உன் உள்ளம் எனக்குத் தெரியாதா! உன் உள்ளத்தில்தானே நான் குடியிருக்கிறேன்.' எனப்பரிவுடன் சொன்னாள்.

தின்பண்டங்களை ருசித்துத் தின்றாள். சிறிது நேரத்தில் வலி ஏற்பட்டது. ரத்னவளி வலி தாங்கவில்லையே எனக் கத்தினாள். 'இதோ ஒரு கணத்தில் குழந்தை பிறக்கப் போகிறான். அவனுக்கு 'மாத்ருபூதன்' எனப் பெயரிடு' என்றார்.

சில நொடிகளில் தங்க மயமான காந்தியுடன் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. ரத்னவளி வலியை மறந்தாள். குழந்தைக்குத் தாய் சொன்னபடி மாத்ருபூதன் எனப் பெயரிட்டாள்.

பல நாட்கள் தாயின் உருவில் வந்த பரமேச்வரன் கங்கை பார்வதி இவர்களுடன் ரத்னவளிக்குப் பணிவிடை செய்து வந்தார்.

வெள்ளம் வடிந்தது. ரத்னவளியின் உண்மைத் தாயார் கூடைகளில் மருந்து, தின்பண்டங்கள் இவற்றை எடுத்துக் கொண்டு மழையில் நனைந்தபடி பெண் வீடு வந்து சேர்ந்தாள்.

மாப்பிள்ளையும் பெண்ணும் தாயைக் கண்டு வாருங்கள் எனக்கூட அழைக்காமலிருந்தனர். அதைக் கண்ட தாய் கண்ணீர் விட்டபடியே திண்ணையிலேயே அமர்ந்து விட்டாள். ஊர் எல்லாம் கூடியது. வந்தவர்களிடம் 'தன் பெண்ணும் மருமகனும் தன்னை மதிக்கவில்லை. வா என்று கூட அழைக்கவில்லை.' என்று கூறி வருத்தப்பட்டாள் தாய்.

அதற்கு ரத்னவளி 'தாங்கள் பல நாட்களாக இங்கேதானே இருக்கிறீர்கள். புதிதாக வந்ததுபோல் வாருங்கள் என அழைக்கவில்லை என்று வருத்தப்படலாமா' என்று கேட்டாள்.

'நான் இப்பொழுதுதானே ஊரிலிருந்து வருகிறேன். வெள்ளத்தினால், உன் கடிதம் கிடைத்தவுடன் வரமுடியவில்லை.' என்றுகூறி உள்ளே நுழைந்தாள்.

குழந்தைக்கு ஸ்நானம் செய்வித்துக்கொண்டிருந்த பரமேச்வரன், கங்கை, பார்வதி மூவரும் மறைந்து விட்டனர்.

உடனே ஆகாயத்தில் அசரீர் ஒன்று கேட்டது.

'ரத்னவளி! நீ வழிபடும் தெய்வமான நான்தான், கங்கை பார்வதி இவர்களுடன் வந்து பணிவிடை செய்தேன். என் பக்தையான உனக்கு எதையும் செய்யக் கடமைப் பட்டுள்ளேன்' எனக் கூறினார். எல்லோரும் ஆச்சரியப்பட்டனர்.

அன்று முதல் மலைக் கோட்டையில் விளங்கும் மகாலிங்கத்திற்கு மாத்ருபூதர் அல்லது தாயுமானவர் என்று பெயரிட்டு திரு நாமம் சாத்தி அழைக்கின்றனர்.

★

# தீபாவளி வாழ்த்துக்கள்

'ஸப்தகிரி'யின் வாசகர்களுக்கும்,
விற்பனைப் பிரதிநிதிகளுக்கும்,
விளம்பரதாரர்களுக்கும்;
திருவேங்கடத்தானின்... திருப்பதி தேவஸ்தானத்
தாரின் இதயங்கனிந்த
தீபாவளி நல் வாழ்த்துக்கள்!
கா. அப்பாராவ்
— ஆசிரியர்.



# செய்திச் சுருக்கம்

## வேத ஆஸீர்வசன ஸேவை

ரூ. 250/- செலுத்தி நான்கு நபர்கள் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் நடைபெறும் இச் சேவையில் பங்கேற்கலாம். அதிகப் படியாக பங்கேற்க விரும்புபவர்கள் நபர் ஒருவர் ரூ. 25/- செலுத்துதல் வேண்டும். பிறந்த நாள், உப நயனம், திருமணம், சஷ்டி பூர்த்தி முதலிய நிகழ்ச்சிகளில் பங்கேற்பவர்களுக் காகவும் அல்லது தங்கள் குடும்பத் தில் மேற்கூறிய நன் நிகழ்ச்சிகள் நடைபெற விரும்புகிறவர்களுக்காக வும் இச்சேவை ஏற்படுத்தப்பட் டுள்ளது.

### இச்சேவையின் முக்கிய அம்சங்கள்

மேற்படி சேவை செய்யும் குடும் பத்தைச் சார்ந்த நான்கு நபர்களுக்கு தி. தி. தேவஸ்தான வேத பண்டிதர் களின் ஆஸீர்வசனம் மற்றும் இறை வனின் தரிசனம் ஆகியன ஏற்பாடு செய்யப்படும்.

ஒரு நாளின் காலை முதல் மாலைக் குள், தி. தி. தே. சௌகர்யத்தின் படி, திருமலைக் கோயிலில் உள்ள விமான பிராகாரத்தின் பழைய திரு மண மண்டபத்தில் இச்சேவை நடை பெறும்.

இச்சேவைக்கான ஆஸீர்வசனம், அக்குடும்பத்தைச் சார்ந்த நான்கு நபர்களுக்கு மட்டுமே கிடைக்கும். மற்றவர்கள், தலைக்கு ரூ. 25/- செலுத்தி, இச்சேவையினை கண்டு களிக்கலாம்.

ஸ்ரீபாத ரேணு, சந்தனம், அக்ஷதை அடங்கிய 'ஸ்ரீவாரி மஹாபிரஸாதம்' வழங்கப்படும்.



கால் ஊனமுற்ற நோயாளி ஒருவருக்குச் சக்ர நாற்காலி வழங்கப்பட்டபோது



## செயற்கை உறுப்பு நிலையம்

திருமலைக்கு வரும் ஆயிரக் கணக் கான யாத்திரிகப் பொது மக்களும், தேவஸ்தான ஊழியர்களும் பயனு றும் வகையில் திருப்பதியில், தி. தி. தேவஸ்தான நிருவாகக் கட்டிடத் தின் பின்புறம் தி. தி. தேவஸ்தானத் தாரின் மத்திய மருத்துவ மனை ஒன்று 13-2-81 முதற்கொண்டு செயற் பட்டு வருகின்றது. தற்போது, உடல் ஊனமுற்றோர் ஆண்டாக இவ் வாண்டு கொண்டாடப்படுவதை ஒட்டி, மேற்படி மத்திய மருத்துவ மனையில் தி.தி. தேவஸ்தானத்தாரின் செயற்கை உறுப்பு நிலையம் ஒன்று 25-8-81 அன்று திறந்து வைக்கப் பட்டுள்ளது. இந்நிலையத்திற்கு தி. தி. தே. முதல் உதவி கட்டமாக ரூ. 4 இலட்சம் வழங்கியது. இந்நிலையத் திற்கான செயற்கை உடல் உறுப்புக் களை, கான்பூரைச் சார்ந்த செயற்கை உறுப்பு தயாரிப்பு கார்ப்பரேஷன் வழங்கும். இக்கார்ப்பரேஷனைச் சார்ந்த பிரபல மருத்துவர் டாக்டர். சி. எம். ராஜ் அவர்கள் இந்நிலையத் திற்காக தற்காலிக பொறுப்பேற்று, அவர்தம் மேற்பார்வையில் இந்நிலை யம் செயற்பட்டு வருகின்றது. 27-2-81 அன்று புது தில்லியைச்

அண்மையில் திருமலைக்கு வருகை புரிந்த ஜெனரல் கே. வி. கிருஷ்ணராவ் அவர்கள் தி. தி. தேவஸ்தான உயர் அலுவலர்களுடன்



சார்ந்த கருணைக் கழகமான 'மங்களம்' எனும் நிறுவனம் மற்றும் திருப்பதி எஸ். வி. ஆர். ஆர். மருத்துவ மனையைச் சார்ந்த உடல் உறுப்பு அறுவை மருத்துவ துறையின் உதவியுடன் உடல் ஊன முற்றோர் முகாம் ஒன்று நடத்தப்பட்டு, 150 நோயாளிகள் பரிசோதிக்கப்பட்டு, 73 நபர்கள் இந்நிலையத்தில் சேர்க்கப்பட்டனர். தேவையுள்ளோர்க்கு இலவசமாக இந்நிலையம் செயற்கை கை கால் உறுப்புக்களை வழங்கும். இந்நிலையத்தின் ஆரம்ப விழாவின்போது உடல் ஊன முற்றோர் ஒருவருக்கு தி. தி. தேவஸ்தானத்தில் ஒரு வேலையும் வழங்கப்பட்டு, சக்ர நாற்காலி ஒன்றும் அவருக்குக் கொடுக்கப்பட்டது.

இந்நிலையத்தின் திறப்பு விழா 25-8-81 அன்று நடைபெற்றது. இவ்விழாவிற்கு திருமதி. டாக்டர். கே. இந்திராபாய் அவர்கள் தலைமை வகிக்க, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் இந்நிலையத்தினைத் திறந்து வைத்து உரையாற்றினார்.

இதுபோது இந்நிலையத்தில் சேர்க்கப்பட்ட சில நோயாளிகளுக்கு செயற்கை கை, கால் உறுப்புக்கள், சக்ர நாற்காலிகள் தேவஸ்தானத்தின் சார்பில் முக்கிய நபர்களால் வழங்கப்பட்டன.

ஃ ஃ ஃ

இந்திய ராணுவ தளபதி ஜெனரல். கே. வி. கிருஷ்ணராவ் அவர்கள் தன் குடும்பத்தாருடன் 2-9-81 அன்று திருமலைக்கு வருகை புரிந்து, ஸ்ரீவேங்கடேஸ்வரரைத் தரிசித்தார்.



---

(26-ம் பக்கத் தொடர்ச்சி)

பொருளீட்ட ஒரு வழி எஞ்சியுள்ளது. அது திருடுவதே. அதாவது வழிப்பறி செய்து அதனால் வரும் பொருளைக் கொண்டு அடியார்களை ஆராதித்தல் வேண்டும். அதனை அன்றி வேறுவழி இல்லை.

இவ்வழியை மேற்கொண்ட பரகாலர் ஒரு நாள் வழிப் பறியின் பொருட்டுத் திருமணங்கொல்லை என்ற இடத்தில் தன் ஆட்களோடு ஒரு நாள் வழிப்போக்கரை நோக்கி, பதுங்கி இருந்தார். இந்நிலையில் இறைவன் பரந்தாமன் ஆலி நாட்டாரை ஆட்கொள்ள திருவுள்ளம் கொண்டார். அவர் அடியாரை ஆராதிப்பதில் கொண்ட அன்பின் பெருக்கினையும் அதன் காரணமான உள்ள உறுதியையும் எண்ணி மகிழ்ந்து, அவருக்கு எட்டெழுத்தை உபதேசிக்கத் திருவுளம் கொண்டார்.

உடனே ஒரு பார்ப்பன மணவாளக் கோலம் கொண்டார். உலக அன்னையாகிய திருமகளும் மணவாளப் பெண்ணின் கோலம் கொண்டருளினாள். இருவரும் பலவகை அணிகளைத் தாங்கியவராய்த் தோன்றினர்.

தம் பரிவாரங்கள் உறவினராய் மாறி புடைசூழ மணமக்கள் ஆலி நாடார் மறைந்திருந்த வழியே வந்தனர்.

பரகாலர் தம் மறைவிடத்தினின்றும் வெளிப்பட்டு மணக்கூட்டத்தைத் தாக்கி கொள்ளை அடித்தார். எல்லாப் பொருள்களும் கவரப்பெற்றன. மணமக்களுக்கு உற்ற சுற்றமாய் வந்தவர் அனைவரும் அஞ்சி ஓடினர்.

கொள்ளையாகக்கொண்ட பொருள் அனைத்தும் ஒரு வழியாகப் பெற்ற பின் மணமகனின் வலக்கையில் ஒரு விரலில் மட்டும் ஒரு மணி ஆழி நீங்காதிருத்தலைக்கண்டு, அதனையும் கழற்றித்தர கேட்டபோது மணமகன் இது கழற்ற இயலாததாய் உள்ளது என்றான். உடனே பரகாலர் தம் பற்களால் கடித்து அக்கை விரலாழியைக் கழற்றினார். அது கண்ட மணமகன், "நம் கலியனோ"? என்றான். பரகாலர் அதைப் பொருட்படுத்தாது பொருள்கள் பொதியப்பெற்ற மூட்டையை எடுக்க முயன்றபோது அம்மூட்டையை எடுக்க இயலவில்லை. சினங்கொண்ட பரகாலர் மணமகனை நோக்கி 'நீ ஓர் மந்திரவாதி. ஏதோ மந்திரபலத்தால் இதை இடம் பெயரவொட்டாது செய்து விட்டாய். அம்மந்திரத்தை நீ எனக்கு கூறுவிடில் உன்னை இவ்வாளால் மாய்த்து விடுவேன்' என்று மிரட்டினார்.

உடனே மணவாளக் கோலத்தில் வந்த அழகிய மணவாளப் பெருமாள் அவர் காதில் எட்டெழுத்து மந்திரத்தை அவருக்கு ஞானம் உண்டாகும்படி ஓதி, அங்கிருந்து மறைந்தார்.

பரகாலர் உண்மை உணர்ந்து இறைவன் பேரருளையெண்ணிப் புகழ்ந்து மகிழ்ந்து ஆடிப்பாடினார்.

பின் திருமால் திருப்பதிகள் தோறும் சென்று பரமனைப் பாடுதலையே விரதமாக ஒழுகி பல அரிய பிரபந்தங்களைப் பாடினார்.

திருவரங்கம் பெரிய கோயில் விமான மண்டபம், கோபுராதி கைங்கரியங்கள் செய்யத்திருவுள்ளம் கொண்டு பொருள்தேட எண்ணுகையில் பெருமுயற்சியுடன் நாகப்பட்டினத்தில் இருந்த புத்த விஹாரத்தில் இருந்த புத்தர் பொன்சிலையை கைக்கொண்டு அதனால் கிடைத்த பொருளைக்கொண்டு கோயில் மண்டபம், மதில் முதலிய கைங்கரியத்திற்கு உபயோகித்துள்ளார் என்பதும் மரபாக உள்ளது.

திருமங்கை ஆழ்வார் என்ற திருநாமத்துடன் வெகுகாலம் வாழ்ந்து வந்த இவர் அருளிய திவ்வியப் பிரபந்தங்கள் பின்வருமாறு:

1. பெரிய திருமொழி
2. திருக்குறுந்தாண்டகம்
3. திருவெழுகூற்றிருக்கை
4. சிறிய திருமடல்
5. பெரிய திருமடல்.
6. திருநெடுந்தாண்டகம்.



# ராசி பலன்

(1-10-81 முதல் 31-10-81 வரை)

Dr. பி. அர்க்கசோமயாஜி, M.A., Phd.
திருப்பதி.

குறிப்பு: நல்ல நாட்கள் எனின், அதுபோது ஒருவருக்கு பணவரவு அல்லது குறைந்த பட்சம் மனமகிழ்ச்சியுடனுவது விளங்குவார். மேலும் அதுபோது பிரயாணம் மேற்கொள்ளவோ அல்லது புதிய திட்டங்களை மேற்கொள்ளவோ ஒருவருக்கு நேரிடும்.

## மேஷம்

(அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

இம்மாதம் முழுவதும் அவ்வளவாக உடல் நலம் இல்லாது விளங்குவர். 17-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகள், பின்னர் உற்றார் உறவினரிடமிருந்து பிரிவு. 10-ம் தேதிக்குப்பிறகு தன் பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல், அல்லது சிறிது உடல் நலம் கெடல். பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள், மகிழ்ச்சி. 17-ம் தேதிக்குப் பிறகு பிரயாணம் அல்லது வயிற்று வலியினுல் அவதியுறல்.

நல்ல நாட்கள்

அசுவனி: 1,8,10,14,19,26

பரணி: 2,7,9-ம் தேதி பிற்பகல், 11,14,25,27.

கிருத்திகை (1-பாதம்); 1,8,10, 14,19,26

## விருஷபம்

(கிருத்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

பெண்கள் மூலம் தொல்லைகள் உண்டாதல். பிள்ளைகள் மூலம் அல்லது தவறுன வழியில் பணவரவு. 10-ம் தேதிக்குப்பிறகு வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினுல் அவதியுறல் அல்லது சிறிது உடல் நலம் கெடல். முயற்சிகளில் வெற்றி: 19ம் தேதிக்குப் பிறகு மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள் கொளல். பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல். 17-ம் தேதிக்குப் பிறகு பணவரவு.

நல்ல நாட்கள்

கிருத்திகை: (2,3,4 பாதங்கள்) 1,3,10,12,17,21

ரோகிணி: 2,9-ம் தேதி பிற்பகல், 11,13

மிருக சீரிஷம் (1,2 பாதங்கள்) 1,3,10,12,17,21

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

10-ம் தேதிக்கு முன்னர் தேவையற்ற செலவினங்கள் அல்லது வீட்டில் திருடு போதல் அல்லது அலுவலகக் கவலைக்குள்ளாதல், உடல் நலத்திற்கு ஒரு சிறிது கேடு நேரிடலாம். 17-ம் தேதிக்குப் பிறகு மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள். பின்னர் பணவரவு, உற்றார் உறவினருடன் பிரிவு அல்லது பெண்கள் மூலம் தொல்லைகளுக்குள்ளாக நேரிடலாம்:

நல்ல நாட்கள்

மிருகசீரிஷம் (3,4 பாதங்கள்) 3,5,12,14,19

திருவாதிரை: 6,13,18,20,23

புனர்வசு: (1,2,3 பாதங்கள்) 3,5,12,14,19

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

பணவரவாயினும், 10-ம் தேதிக்குப்பிறகு கருத்து வேறுபாடுகள் அல்லது சிறிது உடல்நலம் கெடல் அல்லது வீட்டில் திருடு போதல். புதிய ஆடை ஆபரணங்கள், விருந்தினர் வருகை மற்றும் பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல், புதிய நட்புறவுகள், தீய எண்ணங்கொண்டோர் கேடு விளைவிக்க முயற்சிக்கலாம். குடும்பத்தில் மகிழ்ச்சி, அவ்வப்போது பிரயாணம்.

நல்ல நாட்கள்

புனர்வசு (4-ம் பாதம்) 5,7,9,14, 21

ஆயில்யம்: 14,21,25

பூசம்: 1,8,17,26

## ஸிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

17-ம் தேதிவரை அதிக அளவு செலவினங்கள் அல்லது பணநஷ்டம். மற்றவர்களால் ஏமாற்றப்படல் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல். புதிய நட்புறவுகள் 19-ம் தேதி வரை தீய காரியங்களில் ஈடுபடல். 10-ம் தேதி வரை மனைவியுடன் கருத்து வேறுபாடுகள் கொளல்.

நல்ல நாட்கள்

மகம்: 1,8,1017,24

பூரம்: 2,9,18,24-ம் தேதி பிற்பகல், 27

உத்திரம் (1-பாதம்) 1,8,10,17, 19,23,24

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

பிரயாணமும் களைப்பும் அமையப்பெறல். பணவரவாயினும், அதற்குத் தக்கபடி செலவுகள். உற்றார் உறவினருடன் பிரிவு அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள். வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினுல் அவதியுறல். புதிய ஆடை ஆபரணங்கள் மற்றும் மதிப்புயர்தல். 19-ம் தேதிக்குப் பிறகு தவறுன ஆலோசனைக்குள்ளாதல்.

நல்ல நாட்கள்

உத்திரம் (2,3,4 பாதங்கள்) 3,10 12,19,21,26

அஸ்தம்: 9-ம் தேதி பிற்பகல், 13 18,20,25

சித்திரை (1,2 பாதங்கள்) 3,10, 12,17,19,21.

## துலா

(சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

பணவரவு, வெற்றி, ஆனல் தீயநட வடிக்கைகளில் ஈடுபடல். 17-ம்தேதிக் குப்பிறகு பிரயாணமும் உடற்சோர் வும் அமைதல். தவறான ஆலோசனை களைப்பற்றி எச்சரிக்கையாக இருத் தல் நலம். வீட்டில் புதிய மரச் சாமான்கள்விளங்கப்பெறல். கருத்து வேறுபாடுகள் ஏற்பட வாய்ப்புண்டு.

நல்ல நாட்கள்

சித்திரை (3,4 பாதங்கள்): 1,5, 12,14,21,24-ம் தேதி பிற்பகல்.

ஸ்வாதி: 2,6,13,20,24-ம் தேதி முற்பகல்.

விசாகம்: (1,2,3 பாதங்கள்) 1,5, 12,14,21,24-ம் தேதி பிற்பகல், 27

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனு ஷம், கேட்டை முடிய)

பணவரவு,மற்றும் மகிழ்ச்சி. 17-ம் தேதிக்கு முன்னர் விளங்கும் நாட் கள் மிகவும் நன்மையுடனும் மகிழ்ச்சி யுடனும் அமையும். நல்ல நட்புறவுகள் ஏற்படும். 17-ம் தேதிக்குப் பின்னர் பிரயாணம்,தவறான ஆலோசனைகளைப் பற்றி எச்சரிக்கையாக இருத்தல் நலம். 17-ம் தேதிக்குப் பின்னர் வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவு களினல் அவதியுறுவதால் உடல்நலம் கெடல்.

நல்ல நாட்கள்

விசாகம் (4-ம் பாதம்) 3,9,14,16, 23,25

அனுஷம்: 6,17,23-ம் தேதி பிற் பகல்,24-ம் தேதி முற்பகல், 26

கேட்டை: 3,7-ம் தேதி பிற்பகல்; 9,14,16,22-ம் தேதி பிற்பகல், 23ம் தேதி முற்பகல், 25

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

19-ம் தேதிக்குப் பிறகு புதிய ஆடை ஆபரணங்கள். பணவரவு, வெற்றி ஆனல் இம்மாதம் முழுவ தும் செலவுகள் அதிகமாக இருக்கும். 10-ம் தேதிக்கு முன்னர் உடம்பில் காயம் ஏற்படல். புதிய திட்டங்களை மேற்கொள்ளவேண்டாம் என்று இவ் ராசிக்காரர்கள் அறிவுறுத்தப்படு கிறார்கள்.

நல்ல நாட்கள்

மூலம்: 1,6,10,17,19,26

பூராடம்: 1-ம் தேதி பிற்பகல், 11 16,21,25,27

உத்திராடம் (1 பாதம்): 1,5,10, 17,19,26

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

பண வரவு, புதிய நட்புறவுகள். 10-ம் தேதிக்கு முன்னர் மனைவி யுடன் கருத்து வேறுபாடுகள் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினல் அவதியுறல். பண வரவு இருப்பினும், அப்பணத்திற் காகத் தவறான வழியில் ஈடுபடல். 17-ம் தேதிக்குப் பிறகு நாட்கள் நல்லனவாக விளங்குவதால், அது போது செலவுகள் ஏற்பட்டாலும் முயற்சிகளில் வெற்றி. மொத்தத் தில் இவ் ராசிக்காரர்களுக்கு இம் மாதம் நன்றாகவே அமையும். எனி னும் 10-ம் தேதிக்குப் பிறகு வாகன ஓட்டிகள் கவனமாக இருத்தல் நலம்.

நல்ல நாட்கள்

உத்திராடம் (2, 3, 4 பாதங்கள்) 1, 3, 8, 12, 18-ம் தேதி பிற்பகல், 19-ம் தேதி முற்பகல், 21.

திருவோணம்: 2, 9, 13, 18, 20.

அவிட்டம் (1, 2 பாதங்கள்) 1,8, 10, 12, 19, 21, 26.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதை யம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

பண வரவு, பிரயாணமும் உடற் சோர்வும் ஏற்படலாம். அல்லது உற்றார் உறவினருடன் பிரிவு அல்லது சிறிது உடல் நலம் கெடல். 10-ம் தேதிக்குப் பிறகு மனைவியுடன் கருத்து வேறுபாடுகள் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினல் அவதியுறல். 17-ம் தேதிக்குப் பிறகு நாட்கள் நன்றாக அமையும். மொத்தத்தில் இம்மாதம் குறிப்பிடும்படியான நிகழ்ச்சிகள் எதுவுமின்றி கழிந்து விடும்.

நல்ல நாட்கள்

அவிட்டம், (3, 4 பாதங்கள்) 3,5, 10, 14, 21, 23.

சதையம்; 6, 20, 24.

பூரட்டாதி (1, 2, 3 பாதங்கள்); 3, 5, 10, 14, 21, 24-ம் தேதி பிற் பகல்.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்தி ரட்டாதி, ரேவதி முடிய)

16-ம் தேதிக்கு முன்னர் பிரயா ணம் அல்லது வயிற்று வலியினல் அவதியுறல். பின்னர் மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை. 10-ம் தேதிக்கு முன்னர் பிள்ளைகள் அல் லது புதல்வியர் காரணமாகக் கவலை கள். பின்னர் நாட்கள் நன்றாக விளங்கும். மொத்தத்தில் சிறிதளவு செலவினங்கள், கவலைகள் இருப் பினும் மகிழ்ச்சியுடனே இவ் ராசிக் காரர்கள் இம்மாதம் விளங்குவர்.

நல்ல நாட்கள்

பூரட்டாதி (4 பாதம்) 5, 7, 9, 12, 23, 25.

உத்திரட்டாதி: 6, 8, 13, 17, 24, 26.

ரேவதி: 5, 7, 9, 12, 16, 18, 25, 27.



Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D. Press by M. Vijayakumar Reddy, Manager, T. T. D. Press, Tirupati-517501.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

| உத்ஸவ கட்டணங்கள் | | ஸேவைகள் | |
|---|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ரூ. 2500/- | அமந்த்ரணோத்ஸவம் | ரூ. 200/- |
| பிரம்மோத்ஸவம் | ரூ. 750/- | பூராபிஷேகம் | ரூ. 500/- |
| கல்யாணோத்ஸவம் | ரூ. 1500/- | ஸகஸ்ரகலஸாபிஷேகம் | ரூ. 2500/- |
| *ஊஞ்சல் சேவை | ரூ. 1500/- | திருப்பாவாடை | ரூ. 5000/- |
| *தெப்போத்ஸவம் | ரூ. 2500/- | கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ரூ. 1745/- |
| | | ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. 2000/- |

நித்ய சேவைகள் (ஆண்டொன்றுக்கு)

| | | | |
|---|---|---|---|
| நித்ய கற்பூர ஹாரத்தி | ரூ. 150/- | நிரந்தர கற்பூர ஹாரத்தி | ரூ. 3000/- |
| நித்ய நவநீத ஹாரத்தி | ரூ. 400/- | நிரந்தர நவநீத ஹாரத்தி | ரூ. 8000/- |
| நித்ய அர்ச்சனை | ரூ. 200/- | நிரந்தர நித்ய அர்ச்சனை | ரூ. 4000/- |

மேற்படி ஆர்ஜித ஸேவைகளுக்குரிய குறிப்பிட்டத்தொகைக்கான D. D. ஒன்றினை 'The Executive Officer, T. T. D. Tirupati' எனும் பெயரில், எந்த வங்கி மூலமாகவாவது பெற்று, அதனை தேவையான தகவல்களுடன் (ஆங்கிலத்தில்) The Peishkar, T. T. D. Tirumala எனும் முகவரிக்கு 15 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும்.

*இச்சேவைகளை செய்பவர்களுக்கு 5 கி. எடையுள்ள தங்கப்பதக்கம் வழங்கப்படும்.

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலும், திருப்பதியிலும் தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச தங்கு வசதிகள் தவிர்த்து, குறைந்த வாடகை கட்டணங்களில் குறைந்தபட்ச வசதிகளுடன் கூடியது முதல் குளிர்ச்சாதன வசதிகளுடன் கூடிய காட்டேஜுகளில் யாத்திரிகர்கள் தங்கலாம்.

குறிப்பிட்ட தொகையினை ஒரு வாரத்திற்கு முன்கூட்டியே செலுத்தினால், திருமலையில் அல்லது திருப்பதியில் தங்கு வசதிக்கான ஒதுக்கீடு அளிக்கப்படும். தேவையான தங்குவசதியின் சரியான விவரத்தையும், சரியான முகவரியையும் தங்கள் மனுவில் குறிப்பிட்டு அதனுடன் தொகைக்கான டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டர் ரசீதனை இணைத்தல் வேண்டும். குறிப்பிட்ட தங்குவசதி அளிக்க முடியாதிருப்பின், வேறு தங்கு வசதி அளிக்கப்படும். தொகை பெற்றுக் கொண்ட உடனேயே, ஒதுக்கீடு அட்டை அனுப்பப்படும். தங்கு வசதிக்காகத் திருமலைக்கு வருபவர்கள், இவ் ஒதுக்கீடு அட்டையினை குறிப்பிட்ட விசாரணை அலுவலகத்தில் காட்டல் வேண்டும். இவ் அட்டையினையோ அல்லது மணியாடர் ரசீதனையோ அல்லது தொகையினைப் பெற்றுக்கொண்டதற்கான ரசீதனையோ காண்பிக்காவிட்டால். அவர்களுக்கு தங்குவசதி அளிக்கமுடியாது. ஒரு நாள் என்பது காலை 8 மணி முதல் அடுத்த நாள் காலை 8 மணி வரை என்பதாகும். டிமாண்ட் டிராஃபட் அல்லது தொகை பெற்றுக் கொண்டதற்கான ரசீது அல்லது மணியார்டர் ரசீதுடன் கூடிய விண்ணப்பங்கள் யாவும் Reception Officer, T. T. Devasthanams, Tirumala அல்லது Tirupati எனும் முகவரிக்கே அனுப்பப்படல் வேண்டும். டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியாடர் குறிப்பிட்ட Reception Officer எனும் பெயரில்தான் எடுத்தல் அல்லது அனுப்பப்படல் வேண்டும். செக்குகள் (Cheques) ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.

ஸ்ரீ வேங்கடேஸ்வரா பரப்ரஹ்மனே நம:

# நீ ஓர் இந்து - அதற்காகப் பெருமைப்படு!
# பெருமை வாய்ந்த சரித்திரம் உனக்குள்ளது; அதனை மறவாதே!
# அரும்பெரும் தத்துவக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட பேரியக்கம் இந்து சமயம்

உண்மையான ஓர் இந்துவாக [illegible] கீழ்வருவனவற்றைக் கடைப்பிடி

- உனக்கு விருப்பமான சம[illegible] (குங்குமம், சந்தனப்பொட்டு, விபூதி, நாமம்) நெற்றியில் இட்டுக் [illegible]
- தினம் குறைந்தபட்சம் [illegible] மு[illegible]வது [illegible] இறைவனின் நாமத்தை ஜெபிக்கவும்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள நாம[illegible]ல் ஒ[illegible] அல்லது ஒருசிலவற்றையாவது [illegible]

ஓம் ஸ்ரீ வேங்க[illegible]ாய நம

[illegible] பர[illegible]

[illegible]ரா[illegible]

[illegible]நம[illegible]

ஹரே ராம [illegible] ஹரே[illegible]

ஹரே [illegible] ஹரேஹரே

- தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேஸ்[illegible] குறைந்தபட்சம் 10 ஸ்லோகங்களை பாராயணஞ்செய்.
- வாரத்திற்கு ஒரு முறை உன் குடும்பத்தாருடன் உனக்கு விருப்பமான கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடு.
- உங்கள் வீட்டிற்கு முன் 'ஓம்கார்' எனும் முத்திரையினை ஒட்டவும்:
- தினந்தோறும் பகவத்கீதையில் குறைந்தபட்சம் ஒரு ஸ்லோகத்தையாவது பாராயணஞ்செய்.
- சமுதாய சமய விழாக்களில் ஏதாவது ஒருவகையில் பங்கேற்றுக்கொள்.

---

அவனை நம்பு - அவன் உன்னைக் காப்பான்

---

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.